# இந்திய விடுதலைப் போராட்டத்தில் பெருங்காமநல்லூர்



டாக்டர் கே.வி.ஜெயராஜ்
நா.மகேஸ்வரி

# இந்திய விடுதலைப் போராட்டத்தில் பெருங்காமநல்லூர்




ஆசிரியர்கள்

முனைவர் K.V. ஜெயராஜ், M.A., M.Litt., Ph.D.,
இயக்குநர் மற்றும் பேராசிரியர், வரலாற்றுத்துறை.

நா. மகேஸ்வரி, M.A., M.Phil., Ph.D.,
இணை ஆராய்ச்சியாளர்

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் ஆய்வு மையம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

# பதிப்பு விவரங்கள்


தலைப்பு : இந்திய விடுதலைப்போராட்டத்தில் பெருங்காமநல்லூர்

ஆசிரியர்கள் : முனைவர் க.வி. ஜெயராஜ்
திருமதி ந. மகேசுவரி

மொழி : தமிழ்

பதிப்பு : முதல் பதிப்பு, திசம்பர் 2003

பதிப்புரிமை : ஆசிரியர்கள்

பயன்படுத்திய தாள்: TNPL





விலை : ரூ.40-

புத்தக அளவு : கிரவுன்

அச்சிட்டோர் : மதுரை காமராசர் பல்கலைக்கழகக் கூட்டுறவு அச்சகம், மதுரை – 21.

வெளியீடு மற்றும் கிடைக்குமிடம் : பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் ஆய்வு மையம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை – 625 021.

# பொருளடக்கம்

டாக்டர் கா.காளிமுத்து,
எம்.ஏ., பிஎச்.டி.,
பேரவைத் தலைவர்
தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை



தொலைபேசி
அலுவலகம் } : 2567 2708

தலைமைச் செயலகம்
சென்னை.



நாள்: 3.11.2003

# அணிந்துரை

உரிமை இல்லா நிலைமை அடிமை நிலை! உரிமை பெறும் நிலைமை விடுதலை நிலை! நாட்டு விடுதலை – ஆட்சி விடுதலை – சமூக விடுதலை – பொருளியல் விடுதலை – மொழி விடுதலை – பெண் விடுதலை என்று பல விடுதலைகள் உள்ளன. உலகிலே முதன்முதல் உரிமை முழக்கம் செய்தவர்கள் – எழுத்தாளர்களாகவும், பேச்சாளர் களாகவும் வாழ்ந்திட்ட வால்டே மற்றும் ரூசோ ஆவர். இவர்களின் முழக்கங்கள் பிரன்சுப் புரட்சியாக வெடித்தது.

அதுபோல இந்திய ஒன்றியத்தில் கோபால கிருட்டிண கோகலே – பாலகங்காதிர திலகர் ஆகியோர் முழக்கங்கள், இந்திய ஒன்றிய விடுதலை இயக்கமாய் மலர்ந்தது.

இந்திய ஒன்றியத்திலுள்ள நாடுகளில் ஒன்றான தமிழ்நாடு தன்னில்–ஆங்கிலேயர் ஆதிக்கம் எதிர்க்கப்பட்டு உரிமை முழக்கம் எழுந்தது – ஒரு வித்தியாசமான விடுதலை இயக்கமாகும். வேலூர் சிப்பாய்க்கலகம்முதல் வேலுநாச்சியார் புரட்சிவரை சொல்லலாம். இந்த மனித உரிமை இயக்கங்கள் தனித்தனி இடங்களில் நடந்தன. இவைகளை ஒருங்கிணைத்து நடத்த – காந்திவரும்வரை வேறு எவரும் முன்வரவில்லை.

இவ்வியக்கங்களில் ஒன்றான பெருங்காமநல்லூர் போர் பற்றிய இயக்கம் பற்றி பேராசிரியர் ஜெயராஜ் மற்றும் திருமதி.·நா. மகேஸ்வரி எழுதியுள்ளனர்.

இவரது சரித்திர ஆராய்ச்சிப் படைப்புக்கு "இந்திய விடுதலைப் போராட்டத்தில் பெருங்காமநல்லூர்" – என்னும் பெயர் சூட்டியுள்ளனர். இதன் புத்தக வடிவம் – சரித்திர ஆவணமே! இம்முயற்சி பாராட்டுதலுக்குரியதே!.

பெருங்காமநல்லூர் மதுரை மாவட்டத்தில் திருமங்கலம் தொகுதியில் அமைந்துள்ள சிற்றூர்! இவ்வூரில் பெரும்பான்மை சமூகத்தினர் "பிரமலைக்கள்ளர்" ஆவர். இச்சமூகத்தினர் ஆங்கில ஆதிக்கத்திற்கு எதிராகப் போர் புரிந்தனர்.

இந்த மனித உரிமை மீட்பு இயக்கத்தை – சரித்திர ஆதாரங்களைத் திரட்டிக்கொண்டு வந்து–பெருங்காமநல்லூர் விடுதலைப் போரினையும் அதன் பின்னணியும் – அதன் தாக்கத்தையும் சுவையாக எழுதியுள்ள பேராசிரியர் முனைவர் கே.வி. ஜெயராஜ் மற்றும் திருமதி. நா.மகேஸ்வரி ஆகியோரின் 'உழைப்பு' போற்றுதலுக்கு உரியதே!.

1911ஆம் ஆண்டு குற்றப்பரம்பரைச் சட்டம் –1924ஆம் ஆண்டு குற்றப்பரம்பரை திருத்தச் சட்டம் – கொண்டுவந்தது முதல் 1947ஆம் ஆண்டு ஜூன் 5ஆம் நாள் இச்சட்டங்கள் ரத்து ஆகும் வரையுள்ள சரித்திரம் –'புதினம்' போல் எழுதப்பட்டு இருக்கிறது. ஒரு சரித்திர ஆய்வுரையை புதினம் போன்று எழுதியது நூலாசிரியர்களின் நுண்ணறிவைக் காட்டுகிறது.

குற்றப்பரம்பரைச் சட்டம் ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் மீது மட்டும் போடப்பட்டது என்பது பரவலான கருத்து. ஆனால் பேராசிரியர் ஜெயராஜ் மற்றும் திருமதி. நா.மகேஸ்வரி ஆகியோர் 90 வகுப்பினர் மீது குற்றப்பரம்பரைச் சட்டம் பயன்படுத்தப்பட்டது என்பதை ஆதாரப் பூர்வமாகப் பட்டியல் போட்டு காட்டுவது மெச்சத்தக்கதாகும். ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் மீது திணிக்கப்பட்ட 'இழிவு' இவர்களது ஆய்வு நூல் மூலம் நீக்கப்பட்டுள்ளது.

ஜாலியன் வாலாபாக் சம்பவமும், பெருங்காமநல்லூர் புரட்சியும் ஒப்பிடப்பட்டுள்ளது ஒரு புதிய முயற்சியே! ரௌலட் சட்டத்தின் எதிர்ப்பு இயக்கமே ஜாலியன் வாலாபாக் புரட்சி! குற்றப்பரம்பரைச் சட்டத்தின் எதிர்ப்பு இயக்கமே பெருங்காமநல்லூர் புரட்சி! என்பதை நாம் அறிகிறோம்.

ரௌலட் சட்டத்தை எதிர்க்கும் காந்தி - குற்றப்பரம்பரைச் சட்டத்தை எதிர்க்க ஏன் முன்வரவில்லை? என்று ஆராய்ச்சியாளர் நோக்கில் பேராசிரியர் ஜெயராஜ் மற்றும் திருமதி நா. மகேஸ்வரி ஆகியோர் ஆதங்க வினா எழுப்புகின்றனர். இது நியாயமானதே!!

பெருங்காமநல்லூர் போர், ஆங்கிலேய ஆட்சி எதிர்ப்புக்குள் – சமூகப் பொருளியல் அவலம் எதிர்க்கும் புரட்சி எனலாம்!

மன்னர் ஆட்சிக்காலம் முதல், முக்குலத்தோர் என்னும் வகுப்பினர் – 'காவல் காக்கும் தொழில்' புரிந்து வந்தனர். மக்கள் வாழும் பகுதிகளில் 'ஊர்க்காவல்' என்னும் விளைநிலம்

இருக்கும் பகுதிகளில் 'பரவுக்காவல்' என்னும் காவல் முறை பரம்பரைத் தொழிலாக இருந்தது.

ஆங்கிலேய ஆட்சிமுறையில் கல்விமுறை புதிய வடிவில் புகுத்தப்பட்ட பொழுது – "குருகுலக்கல்வி – திண்ணைப்பள்ளி" ஆகியவை மறைந்தன. அதுபோல் ஆங்கிலேய ஆட்சிமுறையில் காவல்முறை புதிய வடிவம் பெற்றது. இதனால் முக்குலத்தோர் என்னும் வகுப்பினர் புரிந்து வந்த 'பரம்பரை காவல்' முறை கேள்விக்குறியானது.

பரம்பரை காவல் முறை பாதிப்பு அடைந்ததால் காவல் தொழில் பறிபோனது. அத்தொழில் மூலம் வந்த வருமானம் பறிபோனது. அதனால் அவர்களுக்கு வேலையும் கூலியும் பறிபோயின. அதனால் அவர்களுக்கு ஆத்திரம் – கோபம் கலந்த கிளர்ச்சி - விழிப்பு - ஏற்பட்டது. இது நியாயமானதே!

காந்திக்கு அறிவு ஆசானாக இருந்த ரஷ்ய நாட்டு அறிஞர் லியோடால்ஸ்டாய் என்பவர், "உழைப்பு வேலை வாய்ப்பினுள் வாழ்க்கை!" அந்த வாழ்க்கை தரும் வருவாயால் இன்பம்! என்று கூறியுள்ள கருத்து இங்கு ஒப்பிடத்தக்கதாகும்.

முக்குலத்தோரில் சிலர் பரம்பரை காவல் முறை இழந்த கோபத்தில் – ஆடுமாடுகளை திருடிச்செல்வதும், மீண்டும் ஒப்படைப்பதும் ஆங்கிலக் காவல்துறைக்கு விட்ட சவால் ஆகும். அதற்கு உதாரணமாக இராபர்ட் கிளைவ் திருச்சி முகாமில் குதிரைத் திருட்டும், நாயக்க மன்னரின் மதுரை அரண்மனையில், மன்னரின் மனைவியின் முத்துமாலை திருட்டும் குறிப்பிடப்பட வேண்டியவை. இத்தகைய சம்பவங்களை எடுத்துக்காட்டாக ஆய்வாளர்கள் பேராசிரியர்

ஜெயராஜ் மற்றும் திருமதி நா. மகேஸ்வரி ஆகியோர் சுட்டிக்காட்டி இருப்பது அவர்களது ஆராய்ச்சி ஆற்றலை வெளிப்படுத்துகிறது. அறிஞர் டேவிட் அர்னால்டு 'திருட்டு – தேவைகளை பூர்த்தி செய்ய அல்ல! திருட்டை பொழுதுபோக்குபோல் மாற்றி, அதன்மூலம் பரம்பரைக் காவல் முறையின் தேவையை உணர்த்தவே' என்று சொல்லிய கருத்தை ஆதாரம் ஆக்கியுள்ள இந்நூலாசிரியர்களை பாராட்டுகிறேன்.

முக்குலத்தோர், பரம்பரைக் காவல் முறையை இழந்ததால் திருட்டு ஏற்படுகிறது. திருட்டை தடுக்க 1911ஆம் ஆண்டு குற்றப்பரம்பரைச் சட்டம் கொண்டு வரப்பட்டது. அது 1914ஆம் ஆண்டு மே 4ஆம் நாள் 'கீழக்குயில்குடி' கிராமத்தில் முதன்முதலாக அமுல்படுத்தப்படுகிறது.

காவல் வேலையை இழந்ததால் வருவாயை இழக்கும் மக்களுக்கு வாழ்க்கை ஒரு கேள்விக்குறியாகிறது. இது ஒரு பொருளியல் அவலம் ஆகும்.

பொழுதுபோக்காகச் செய்த திருட்டுக்களை அடக்கிட, திருட்டு செய்பவர்களை காவல் நிலையம் அழைத்து கைரேகை வாங்குவதும் ஒரு குறிப்பிட்ட இனத்தை 'இழிவு' செய்வதாகும். இது ஒரு சமூக அவலம் ஆகும்.

1919ஆம் ஆண்டு ஏப்ரல் 13ஆம் நாள் 'ஜாலியன் வாலாபாக்கிலும் 1920ஆம் ஆண்டு ஏப்ரல் 3ஆம் நாள் பெருங்காமநல்லூர் கிராமத்திலும்' நடந்த ஆங்கிலக் காவல்துறை முற்றுகைகளை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

இரண்டிலும் ஆங்கில ஆட்சி ஆதிக்க எதிர்ப்பு என்பது பொதுவான அம்சமாகும். ஆனால் ஜாலியன் வாலாபாக் சம்பவம் 'அரசியல் பின்னணி' கொண்டது. பெருங்காமநல்லூர் சம்பவம் 'அரசியல்-சமூகம் பொருளியல் பின்னணி' கொண்டதே!

ஜாலியன் வாலாபாக் சம்பவம் அரசியல் புரட்சி! பெருங்காமநல்லூர் சம்பவம் அரசியல் மற்றும் சமூகப் பொருளியல் புரட்சியே!

"இந்திய விடுதலைப் போராட்டத்தில் பெருங்காமநல்லூர்" என்னும் ஆராய்ச்சி நூல் எழுதியுள்ள பேராசிரியர் ஜெயராஜ் மற்றும் திருமதி நா. மகேஸ்வரி ஆகியோர், என்னுடைய சட்டமன்ற தொகுதியான திருமங்கலம் தாலுகாவில் உள்ள ஒரு சிறு கிராமச்சம்பவம் பற்றிய சரித்திரத்தை வெளியுலகிற்கு விளக்கியுள்ளார்கள் என்பதற்காக போற்றுகிறேன். சுதந்திரம் வரும் முன் 1947ஆம் ஆண்டு ஜூன் 5ஆம் நாள் குற்றப்பரம்பரைச் சட்டம் ரத்து ஆகிறது. இந்நாள் விழாவாய் கொண்டாடப் படலாம் எனும் கருத்தையும் வெளியிடுகிறேன். அதுபோல் 'கிழக்கிந்திய கம்பெனியை எதிர்த்த கீழக்குயில்குடி' என்னும் தலைப்பில் கூட சிந்தித்து – உழைத்து - புதிய ஆய்வுநூல்களை வெளியிட்டு, மறைக்கப்பட்ட சரித்திரங்களை வெளியிட வேண்டும் என்று வேண்டுகோள் விடுக்கிறேன்

இவண்,

(கா. காளிமுத்து)




# மதுரை காமராசர் பல்கலைக்கழகம்


பேராசிரியர் ப க பொன்னுசாமி,
துணைவேந்தர்

பல்கலை நகர்
மதுரை – 625 021.


நாள்: 14.11.2003

## அணிந்துரை

ஆங்கிலேயர்கள் நமது மண்ணில் காலூன்றிய பிறகு தங்கள் ஆட்சியை நிலைநிறுத்திக்கொள்ள நேரடியாகவும் மறைமுகமாகவும் பல நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். அப்படி மேற்கொள்ளப்பட்ட ஒரு மறைமுக நடவடிக்கைதான் "குற்றப்பரம்பரைச் சட்டம்" என்ற பெயரில் ஒரு சட்டத்தை கொண்டு வந்ததாகும். இந்தச் சட்டம் நாட்டின் வேறு சில பகுதிகளில் நடைமுறைக்கு வந்திருந்தாலும், தமிழகத்தில், மதுரை மாவட்டத்தில் வசிக்கும் "கள்ளர்" இனத்தவர் மீது திணிக்கப்பட்டபோதுதான் அது ஒரு பெரிய எதிர்ப்பை எதிர்கொள்ள வேண்டியிருந்தது.

இந்திய விடுதலைப் போராட்டத்தில் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் சிறிய பெரிய இனப்பிரிவுகளாகப் பிரிந்து நின்றவர்கள் வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் பங்கு பெற்றார்கள். ஆங்கிலேயரின் மேற்குறிப்பிட்ட குற்றப் பரம்பரைச் சட்டத்தை எதிர்த்துக் "கள்ளர்" இனம் திருமங்கலம் பெருங்காமநல்லூரில் நிகழ்த்திய நிகழ்வுகளை இந்திய விடுதலைப் போரின் ஒரு கூறு என்று இந்நூலாசிரியர்கள் முனைவர் கே.வி. ஜெயராஜும், திருமதி நா.மகேஸ்வரியும்

பதிவு செய்ய சான்றுகளை முன்வைக்கிறார்கள். மிகச்சிறிய கால இடைவெளியில் நடைபெற்ற "ஜாலியன் வாலாபாக்" படுகொலை நிகழ்வையும் பெருங்காமநல்லூர்ப் படுகொலை நிகழ்வையும் ஒப்பிட்டு, கள்ளர் இனப்போராட்டம் இந்திய விடுதலைப் போராட்டத்தின் கூறுதானென்று கூறுகிறார்கள். அத்தோடு இந்திய விடுதலைப் போராட்டத்தோடு இணைத்துக் குறிக்கப்படும் "மைசூர்ப்போர்", "சிவகங்கைப்போர்", "பாஞ்சாலங்குறிச்சிப்போர்" என்பனவெல்லாம் ஆங்கிலேயருக்கு வரி கொடுக்க முடியாததால் / மறுத்ததால் ஏற்பட்ட போர்களேயன்றி இந்திய விடுதலைக்காக நடந்த போர்களல்ல என்று கூறுவதோடு, "பெருங்காமநல்லூர் போரை மட்டுமே இந்திய விடுதலைப் போரோடு இணைத்துப் பார்க்க வேண்டும்" என்ற கருத்தையும் நூலாசிரியர் விவாதிக்கிறார்கள்.

வெளியில் அதிகம் பேசப்படாத பெருங்காமநல்லூர் நிகழ்வை வெளிச்சத்திற்கு கொண்டுவர முயலும் நூலாசிரியர்களின் முயற்சி பாராட்டுக்குரியது. ஆனாலும் இந்திய விடுதலைப் போரின் கூறுகள் என்று பெரிதும் பேசப்படும் பல நிகழ்வுகள் பின்னுக்குத் தள்ளப்படுவதும் "களவு, கொள்ளை போன்ற செயல்கள் வாழ்க்கையின் கட்டாயத்திற்காக மேற்கொண்ட செயல்களேயன்றி அவற்றைக் குற்றங்களென்று கொள்ளமுடியாது" என்று குறிக்கப்பெறுவதும், "இன்றைய காவல் முறையைவிட அப்போதிருந்த மரபுவழிக் காவல் முறையே சிறந்தது" என்று குறிக்கப்பெறுவதும் ... போன்ற சில செய்திகளை வரலாற்றாசிரியர்களும் சமூகவியலாசிரியர்களும் ஏற்பார்களா என்ற எண்ணமும் முன்வருகிறது.

விடுதலைப் போரோடு இட ஒதுக்கீட்டுத் தேவையை நூலின் கடைசிப் பக்கங்கள் இணைக்கின்றன. இந்த முயற்சி நூலின் வரலாற்று மதிப்பை குறைத்திட வழி வகுத்துவிடும்.

பெருங்காமநல்லூர் போர் பற்றிய இந்நூல் மேலும் ஆய்வுகளுக்கு ஊக்கமளிக்கும்.

(ப.க. பொன்னுசாமி)

# முகப்புரை

'இந்திய விடுதலைப் போரில் பெருங்காமநல்லூர்' என்னும் இந்நூலை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் ஆய்வு மையத்தின் சார்பாக வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

இந்நூலுக்கு, பெருங்காமநல்லூர் கலவரம் குறித்த செய்திகள் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன. ஏனைய செய்திகள் பெரும்பாலும் எல்லாப் புத்தகங்களிலும் இருக்கின்ற காரணத்தினாலும், பலருக்கும் தெரிந்த செய்திகள் என்பதாலும் தேவையான இடங்களில் மட்டும் மேற்குறிப்புகள் காட்டப்பட்டுள்ளன. இந்திய வரலாற்றிலுள்ள விடுதலைப்போராட்டம் தொடர்பான விடுதலை இயக்கம் மற்றும் ஆங்கிலேயரின் ஆட்சிமுறை ஆகிய செய்திகள் தேவையான இடங்களில் அங்குமிங்கும் எடுத்தாளப் பட்டுள்ளன.

இந்நூல் இதுவரை மறந்துவிட்ட, விடுதலைக்காகப் பாடுபட்ட எண்ணற்ற மக்களின் போராட்ட நிகழ்ச்சிகளில் ஒன்றினை வெளிக்கொண்டுவரும் நூலாகும். எனவே, இந்நூல் அடித்தள மக்களின் வரலாற்றிற்கு ஒரு அணிகலனாக விளங்கும் என்பதில் ஐயமில்லை. மேலும், ஆங்கிலேயர் தங்கள் ஆதிக்கத்தை தக்கவைத்துக் கொள்ளவே குற்றப்பரம்பரைச் சட்டத்தை புகுத்தினர் என்பதையும் அதற்காக பெருங்காமநல்லூர் மற்றும்

அதனைச் சுற்றியுள்ள கிராம மக்கள் செய்த தியாகத்தையும் இந்நூல் உணர்த்தி நிற்கிறது.

'மேடைமணி' என்று பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரால் பாராட்டப்பட்டவரும், இன்றைய திருமங்கலம் தொகுதி சட்டமன்ற உறுப்பினராகவும், தமிழக சட்டப் பேரவைத் தலைவராகவும் இருந்துவரும் முனைவர் கா.காளிமுத்து அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கி சிறப்பித்துள்ளமைக்கு எங்கள் பணிவான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியவரும், பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் ஆய்வு மைய வளர்ச்சியில் அக்கறை காட்டி வருபவரும், ஆய்வு மைய நிதியிலிருந்து பணம் ஒதுக்கி இந்நூல் வெளிவரத் துணைபுரிந்தவருமாகிய எங்கள் துணைவேந்தர் பேராசிரியர். ப.க. பொன்னுசாமி அவர்களுக்கு எங்களது உளங்கனிந்த நன்றியை பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் ஆய்வு மையத்தின் சார்பாக தெரிவித்துக் கொள்கிறோம்.

எங்களுடைய ஆலோசனையின் பேரில் அட்டைப்பட வடிவமைப்பு வரைந்து கொடுத்த திரு.சு.ரவிக்குமார் அவர்களுக்கு எங்களது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலை வடிவாக்கம் செய்ய பல வகைகளிலும் துணை புரிந்த திருமதி க. பேச்சியம்மாள் (Research Associate) மற்றும் முனைவர் த.ச. தங்கமுத்து,

விரிவுரையாளர், வரலாற்றுத்துறை அவர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலை சிறப்பாக அச்சிட்டு நூல் வடிவில் வழங்கிய மதுரை காமராசர் பல்கலைக்கழக கூட்டுறவு அச்சகத்தாருக்கும் எங்களது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

Dr. K.V. ஜெயராஜ்
திருமதி N. மகேசுவரி

# பாகம் 1

## முன்னுரை

இந்தியா தொன்று தொட்டு பல மன்னர்களால், பல வம்சா வழியினர்களால், பல சிற்றரசுகளாக ஆட்சி செய்யப்பட்டு வந்தது. இந்திய அரசர்களிடையே இருந்த ஒற்றுமையின்மையின் காரணமாக முதலில் இஸ்லாமிய படையெடுப்பும், பின்னர் மொகலாயர் படையெடுப்பும், அதற்கும் பின்னர் ஆங்கிலேயருடைய ஆட்சியும் அமைந்ததால், அது ஒன்றுபட்ட இந்தியாவாக உருவெடுத்தது. ஆங்கிலேயர் ஆட்சி ஏற்படும் போதும், ஏற்பட்ட பின்னரும் ஆங்கிலேயருக்கு எதிராக இந்தியர்கள் பல புரட்சிகளையும், போராட்டங்களையும் ஏற்படுத்தினர். அவற்றில் பல நிகழ்சிகளை, குறிப்பாக வட இந்தியாவில் நடந்த நிகழ்ச்சிகளை பெரிதுபடுத்தி, அவை நாட்டின் விடுதலைக்காக ஏற்பட்ட நிகழ்ச்கிகளாகவும், அவற்றில் பங்கு கொண்ட தலைவர்களை மாபெரும் விடுதலை வீரர்கள் என்றும் வரலாற்றுப் புத்தகங்கள் சித்தரிக்கின்றன. ஆனால், அத்தகைய நிகழ்ச்சிகள் தென்னாட்டில், குறிப்பாக தமிழ்நாட்டில் நிகழ்ந்திருந்த போதும் அவை பெரிதும் மதிக்கப்படவில்லை. பெரிய வரலாற்று ஆசிரியர்களின் கண்களுக்கு புலப்படவில்லை. எனவே, தமிழ்நாட்டில் நடந்த மக்கள் இயக்கமாகத் தோன்றிய பெருங்காமநல்லூர் கலவரத்தை ஆதார பூர்வமாக இந்நூல் விளக்கி, தென் தமிழ்நாட்டில் வாழ்ந்த பாமர, படிக்காத மக்களிடையே இருந்த ஆங்கிலேய எதிர்ப்பு உணர்வினை

வெளிக்கொணர்ந்து இவ்வுலகிற்கு தெரியப்படுத்த எழுதும் நூலே இது.

இந்நூலில் பெருங்காமநல்லூர் கலவரத்தைப் பற்றி விளக்குவதற்குமுன், இந்நாடு எவ்வாறு ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டது என்றும், அடிமைப்படுகின்ற போதும், அடிமைப்பட்ட பின்னரும் எத்தகைய எதிர்ப்பு இயக்கங்கள் எழுந்தன என்பதையும், பாமர மக்கள் புரிந்து கொள்ளும் வகையில் அங்குமிங்கும் சில நிகழ்ச்சிகளைக் கோடிட்டுக்காட்டி பின்னர் பெருங்காமநல்லூர் கலவரத்தின் முக்கியத்துவம் மற்றும் அதன் நிகழ்வுகள் ஆகியவை ஆதாரங்களுடன் மேற்கோள்காட்டி எழுதப்பட்டுள்ளது.

பெருங்காமநல்லூர் கிராமம் மதுரை மாவட்டம் திருமங்கலம் தாலுகாவில் உள்ளது. இக்கிராமத்தில் வாழ்கின்ற மக்களில் பெரும்பாலோனோர் பிரமலைக் கள்ளர் வகுப்பைச் சார்ந்தவர்கள். ஆங்கிலேய அரசு தன்னுடைய அதிகாரத்தை நிலைநிறுத்திக் கொள்ள கடைபிடித்த பல வழிகளில் ஒன்றுதான் குற்றப்பரம்பரைச் சட்டம் என்பது. இச்சட்டத்தை பெருங்காமநல்லூரில் வாழ்கின்ற பிரமலைக்கள்ளர்கள்மீது திணித்தபோது எழுந்த புரட்சிதான் பெருங்காமநல்லூர் கலவரம் என்பது. இக்கலவரம் சாதாரண ஒரு குறிப்பிட்ட இடத்தில் நடந்த நிகழ்ச்சி என்று சொல்ல முடியாது. இதனுடைய தாக்கம் இந்திய விடுதலை போராட்டத்திற்கு ஒரு தூண்டுகோலாக அமைந்தது. இக்கலவரம் ஆங்கிலேயரை எதிர்த்து வந்த இந்திய தேசிய காங்கிரஸ் வலுப்பெற காரணமாக அமைந்தது. எனவே,

இந்த நிகழ்ச்சி அடித்தள மக்களின் வரலாற்றை எடுத்தியம்பும் நிகழ்ச்சியாக அமைந்துள்ளது. பெருங்காமநல்லூர் கலவரத்தின் தன்மை, அதனால் ஏற்றபட்ட விளைவுகள் ஆகியவை இக்கலவரம் இந்திய விடுதலை இயகத்தில் பெரும் பங்கு ஆற்றியது என்பதை விளக்கும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கிலேய அரசு, குறிப்பாக 1906ஆம் ஆண்டுக்கு பின்னர், அதாவது சூரத் காங்கிரஸ் மாநாட்டிற்கு பின்னர், இந்திய மக்களைப் பிரித்தாள வேண்டுமென்ற கொள்கையில் நிர்வாகம் செய்தது. ஏனென்றால், இந்திய மக்களின் குறைகளை மனுக்கள் மூலம் .கொடுப்பதையே கடமையாக கருதிவந்த காங்கிரஸ் கட்சி 1906ஆம் ஆண்டுக்குப் பின்னர் மிதவாதம், தீவிரவாதம் என்று இரண்டாக பிரிந்து, ஆங்கிலேய ஆட்சிக்கு குந்தகம் விளைவிக்கும் சூழ்நிலையை உருவாக்கியது. காங்கிரஸ் கட்சியின் தீவிரவாதிகளான பாலகங்காதர திலகர், ராஷ்பெஹாரிபோஸ், வ.உ,சிதம்பரம்பிள்ளை, V.D.சவார்க்கார் போன்றவர்கள் பல தீவிர செயல்களில் ஈடுபட்டனர். இதனால் பல ஆங்கில அதிகாரிகள் கொலை செய்யப்பட்டனர். எனவே, இத்தகைய சூழ்நிலையில் இந்திய மக்களை எந்தெந்த வகைகளில் பிரித்து, அதில் பலரை எப்படி தங்களுக்கு சாதகமாக வைத்துக் கொள்வது என்ற முயற்சியை ஆங்கிலேயர் மேற்கொண்டனர். அதன் விளைவாக 1909ஆம் ஆண்டு மிண்டோ-மார்லி (Minto-Morley) சீர்திருத்தச் சட்டம் என்ற ஒன்றை இயற்றி அச்சட்டத்தின் மூலம் இஸ்லாமியர்களுக்கு அதிக சலுகைகளை வழங்கினர். இந்தச் செயல்பாட்டால் வட இந்தியாவில் இந்துக்களிடமும், முஸ்லீம்களிடமும் ஓரளவு

வெறுப்புணர்வை உருவாக்க முடிந்தது. இதற்கு காரணம் வட இந்தியாவில் முஸ்லீம் ஜனத்தொகை அதிகமாக இருந்ததுதான். ஆனால், இந்நிலை தென்னிந்தியாவில் இல்லை. எனவே, தென்னிந்தியாவில் வாழுகின்ற இந்துக்களிடையே பிளவு மனப்பான்மையை வளர்க்க வேண்டுமென்று கருதிய ஆங்கிலேய அரசு, பிராமணர்கள் மற்றும் பிராமணர் அல்லாதவர்கள் என்ற உணர்வைத் தூண்டும் வகையில் **பிராமணர் அல்லாதார் இயக்கம்** (Non-Brahmin Movement) என்ற இயக்கத்தையும், பின்னாளில் அது **நீதிக்கட்சி** (Justice Party) என்று தோன்றவும் துணை நின்றது. இவ்வாறாக, எந்தெந்த வகைகளில் இந்திய மக்களைப் பிரிக்க முடியுமோ, அத்தனை வழிகளிலும் அவர்களைப் பிரிக்க ஆங்கிலேய அரசு முயற்சிகளை மேற்கொண்டது. அவ்வாறு மேற்கொண்ட முயற்சிகளில் ஒன்றுதான் 1911இல் கொண்டுவரப்பட்ட குற்றப்பரம்பரைச் சட்டம் (Criminal Tribes Act of 1911). இச்சட்டம் 1902-03ஆம் ஆண்டில் இந்திய காவல்துறை ஆணையத்தால் (Indian Police Commission) சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையின் அடிப்படையில் கொண்டு வரப்பட்டது.

1871ஆம் ஆண்டு, வட இந்தியாவிலுள்ள குற்றங்களைத் தடுக்கும் வகையில், குற்றப்பரம்பரைச் சட்டம் (C.T Act) என்ற ஒரு சட்டமானது அப்போதைய இந்திய நாடாளுமன்றத்தில் கொண்டு வரப்பட்டது. ஆனால் அச்சட்டம் அப்போது சென்னை மாகாணத்தில் அமுல்படுத்தப்படவில்லை. 1906ஆம் ஆண்டுக்குப் பின்னர்

தீவிரவாதிகளால் ஏற்பட்ட தாக்கத்தால் சென்னை மாகாணத்தில் வாழுகின்ற முரட்டுக் குணம் படைத்த சில ஜாதியினர் மீதும் கட்டுப்பாட்டை விதிக்க வேண்டுமென்று கருதி 1911ஆம் ஆண்டில் 1871ஆம் ஆண்டு சட்டத்தில் உள்ள சில விதிமுறைகளில் மாற்றம் செய்து, ஒரு புதிய சட்டத்தை கொண்டு வந்தனர். இந்த 1911ஆம் ஆண்டு குற்றப்பரம்பரைச் சட்டத்தின் முக்கிய அம்சங்களாவன: "1911ம் ஆண்டு குற்றப்பரம்பரைச் சட்டத்தின்படி, ஒரு மாவட்ட நீதிபதியானவர் எந்த ஒரு ஜாதியையும் அல்லது எந்த ஒரு கூட்டத்தையும் (Gang) குற்றப்பரம்பரை என்று பிரகடனம் செய்யலாம். அதவாது ஒரு குறிப்பிட்ட ஜாதி அல்லது கூட்டம் தொடர்ந்து ஜாமீனில் வரமுடியாத குற்றங்களை செய்து கொண்டிருக்கிருக்கிறார்கள் என்று உறுதி செய்யப்பட்டால், அந்த ஜாதியினரை குற்றப்பரம்பரையினர் என்று பிரகடனம் செய்யலாம். அவ்வாறு செய்யப்பட்ட பின்னர் அந்த குறிப்பிட்ட ஜாதியில் உள்ள வயது வந்த அனைவரும் அந்த மாவட்ட நீதிபதி குறிப்பிடுகின்ற காவல் நிலையத்தில் தினமும் இரவு நேரங்களில் சென்று தங்கள் வருகையைப் பதிவு செய்ய வேண்டும். அவர்களில் பெரும்பாலோனோர் கல்வியறிவு இல்லாத காரணத்தால் கையொப்பமிடுவதற்கு பதிலாக கைரேகையை வைப்பர். எனவே, இச்சட்டத்திற்கு ரேகைச் சட்டம் என்ற பெயரும் வழக்கில் இருந்தது. மேலும், இவ்வாறு அறிவிக்கப்பட்ட குற்றப்பரம்பரையினர், தான் இருக்கும் இடம் எது என்பதை காவல்துறைக்கு அறிவிப்பு செய்ய வேண்டும். மேலும், இவர்கள் தாங்கள் இருக்கும்

இடத்தை விட்டு இன்னொரு இடத்திற்கு செல்ல வேண்டுமானால் தாங்கள் செல்லும் இடத்தையும், என்ன காரணத்திற்காக அந்த இடத்திற்கு செல்கிறார்கள் என்பதையும் அந்த காவல் நிலையத்தில் தெரிவிக்க வேண்டும்". இது போன்ற கடுமையான சட்ட திட்டங்கள் வரையறை செய்யப்பட்டு, தனிமனிதனின் சுதந்திரத்திற்கு பாதகம் விளைவிக்கப்பட்டது. இத்தகைய சட்டத்தை சென்னை மாகாணத்தில் ஆங்கிலேய அரசு பல இனத்தவர்கள் மீது புகுத்தியது. உதாரணமாக 1913ஆம் ஆண்டில் தொங்க எருக்களர் (Tonga Yerukalas), நவாப்பேட் குறவர் (Nawabpet Korachas), தொங்க தாசரி (Donga Dasaris), வேப்பூர் பறையர் (Veppur Paraiahs), தொங்க ஒட்டார் (Tonga Woddars), தோகைமலை குறவர் (Togamalai Koravars), தொம்மர் (Dommaras), சேலம் மேல்நாட்டு குறவர்கள் (Salem Melnad Koravars), ஆத்தூர் கீழ்நாட்டு குறவர் (Athur Kilnad Koravars), நக்கலர் (Nakkalar) மற்றும் கந்தர்வகோட்டை குறவர்கள் (Gandarvakottai Koravars) ஆகியோர் மீது இச்சட்டம் பிரயோகிக்கப்பட்டது.[1]

திரு A.C. கிளின்ஞ்ச் (Clinch), மாவட்ட காவல்துறைக் கண்காணிப்பாளர் (District Superintendent of Police) என்பவர் கொடுத்த அறிக்கையின் அடிப்படையில், மதுரை மாவட்ட நீதிபதி திரு. Knapp என்பவர் 1914ஆம் வருடம் ஏப்ரல் 8ஆம் தேதி அரசு செயலருக்கு கடிதம் எழுதுகின்றார். அக்கடிதத்தின் அடிப்படையில் 1914ஆம் வருடம் மே மாதம் 4ஆம் தேதி கீழக்குயில்குடி கள்ளர்கள்

மீது இச்சட்டம் முதன்முதலில் புகுத்தப்பட்டது.[2] கீழக்குயில்குடி கள்ளர்கள் மீது இச்சட்டத்தை அறிமுகப்படுத்தும்போது கீழக்குயில்குடியில் வாழும் கள்ளர் இனத்தைச் சார்ந்த அனைவரும் திருடர்கள் என்று கூறுவது மிகவும் கடினம் என்று மாவட்ட நீதிபதி கூறுகின்றார். அவர்கள் அங்கீகரிக்கப்பட்ட கூட்டமாகச் சேர்ந்து எந்தக் குற்றங்களையும் செய்ததில்லை. எனவே, அவர்களுக்குள் யார் மீது இந்தக் குற்றப்பரம்பரைச் சட்டத்தை (CTA) திணிப்பது என்பது மிகவும் பரிசீலனைக்குரிய ஒன்றாகும். இந்நிலையில் தற்போது பிரமலைக்கள்ளர்கள் வாழுகின்ற கிராமங்களில், எந்தெந்த கிராமங்களில் அதிகமாக குற்றவாளிகள் இருக்கின்றார்களோ அந்த கிராமங்களின் மீது இச்சட்டத்தை பயன்படுத்தலாம் என்று கருதப்படுகிறது. உதாரணமாக கீழக்குடி கிராமத்தில் வயது வந்தோர் 321 பேர் இருக்கிறார்கள் என்றால் அவர்களில் 79 பேர் குற்றம் செய்து தண்டனை பெற்றவர்களாக இருக்கின்றனர். எனவே, இக்கிராமம் முழுவதையும் குற்றப் பரம்பரைச் சட்டத்தின் கீழ் கொண்டு வர வேண்டுமென்று சிபாரிசு செய்யப்பட்டது.[3] இதேபோன்று 1915ஆம் ஆண்டு செப்டம்பர் 16ஆம் நாள் மேல உரப்பனூர் கள்ளர்கள் மீது இச்சட்டம் திணிக்கப்பட்டது. அதற்கு காவல்துறை கண்காணிப்பாளர் (S.P) கொடுத்த கணக்கின்படி இக்கிராமத்தில் வாழும் 99 வயது வந்தோர்களில், 26 பேர் தண்டனை பெற்றோர் என்று கூறப்பட்டது. அதே ஆண்டு பூசலப்புரம் கள்ளர்கள் மீதும் இச்சட்டம் புகுத்தப்பட்டது.[4]

அடுத்தப்படியாக 1918ஆம் ஆண்டு ஜுான் 5ம் தேதி மதுரை மாவட்டத்தில் வாழுகின்ற அனைத்து பிரமலைக்கள்ளர்கள் மீதும் 1911ஆம் ஆண்டு குற்றப்பரம்பரைச் சட்டம் புகுத்தப்பட்டது.[5] இச்சட்டம் பிரகடனப் படுத்தப்படுவதற்கு முன் மதுரை மாவட்ட நீதிபதி Mr. G.I. Paddison என்பவர், அரசுச் செயலர் Mr.Knapp என்பவருக்கு எழுதிய கடிதத்தில் இச்சட்டத்தைப் பிரகடனப் படுத்துவதற்காக கூறிய காரணங்கள் மிகவும் வேடிக்கையாக உள்ளது. அதாவது Mr. G.I. Paddison என்பவர் "பிரமலைக்கள்ளர்களுடைய குற்ற இயல்புகளை விளக்கமாகக் கூற வேண்டியதில்லை. இவர்களைப் பற்றி மதுரை மாவட்ட கெஷட்டியரிலும் (District Gazetteer), எட்கார் தர்ஸ்டன் மற்றும் முல்லாலே ஆகியோர்கள் எழுதிய புத்தகங்கள் வாயிலாகவும், "Theft is not their occupation, but their principal recreation" என்று அறிய முடிகிறது. அதாவது திருடுவது அவர்களுடைய தொழிலல்ல. இதை அவர்கள் ஒரு முக்கிய பொழுது போக்காக கருதுகின்றனர். இவர்கள் செய்யும் திருட்டு பழக்கங்களில் முக்கியமானது ஆடு, மாடு திருடுவது. கடந்த பல ஆண்டுகளாக இவர்களிடம் இருக்கும் பரம்பரைத் தொழிலை (Hereditary Practice) குறைக்க பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இந்த மாவட்டத்தில் இவர்களை கண்காணிப்பதற்காக சிறப்புக் காவல்படை ஒன்று அமைக்கப்பட்டது. இவர்கள் மீது பாதுகாப்பு பிரிவுகள் மீது விசாரணை மேற்கொள்ள சிறப்பு முதல்நிலை நடுவர் (First Class Magistrate) ஒருவர் நியமிக்கப்பட்டிருந்தார். கள்ள நாட்டில் கூட்டுறவு சங்கங்கள்

அமைக்க சிறப்பு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டது. விதிமுறைப்படி அவர்களுக்கு சிறப்பு சலுகைகள் வழங்கப்பட்டது. கூடலூரில் சீர்திருத்த முகாம் அமைக்கப்பட்டது. இவர்களை ராணுவத்தில் சேர்ப்பதற்கு சிறப்பு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டது, இருந்தாலும் பலனில்லை."

"இந்த மாவட்டத்தில் கள்ளர்கள் தங்களுடைய திருட்டுத் தொழிலை தாங்களாகவே விட்டுவிட வேண்டும் என்று தூண்டுவதுதான் ஆங்கிலேய அரசின் முக்கிய குறிக்கோளாக இருந்தது. இதனை மேலூர் கீழ்நாட்டுக் கள்ளர்களிடம் சாதித்து விட்டேன். அதே போன்று மேல்நாட்டுக் கள்ளர்களாகிய பிரமலைக்ககள்ளர்களிடமும் சாதிக்க வேண்டும். எனவே குற்றப்பரம்பரைச் சட்டத்தினுடைய கடுமையான விளைவுகளை அவர்களுக்கு எடுத்துக்கூறி, நீங்கள் திருந்தவில்லை என்றால் இச்சட்டம் உங்கள் மீதும் பாயும் என்று 'எச்சரித்தேன்" என்று திரு.G.I.Paddison கூறுகிறார். "சில இடங்களில் பஞ்சாயத்து முறை அறிமுகப்படுத்தப்பட்டது. ஆனால், இந்த பஞ்சாயத்தார்கள் கள்ளர்கள் செய்யும் குற்றங்களை சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு தெரிவிப்பதற்கு பதிலாக, அக்குற்றங்களை மறைத்து வந்தனர்."

"குற்றப்பரம்பரைச் சட்டத்தை இதுவரை அமுல்படுத்தியதில் திருப்தியாக உள்ளது. இதன் முதல் கட்டமாக, பதிவு செய்யப்பட்ட கள்ளர்கள் செய்யும் குற்றங்கள் மிகவும் குறைந்துள்ளது. சிறுசிறு குற்றங்கள்

மட்டும்தான் அவர்கள் தற்போது செய்கின்றார்கள். மேலும் இச்சட்டத்தின் மூலம் கள்ளர்கள் தாங்களாகவே திருந்திக் கொள்கின்ற சூழ்நிலை உருவாகிறது. இச்சட்டத்தால் இரவு நேரங்களில் வேறு பல இடங்களுக்குச் செல்லமுடியாத நிலை ஏற்படுகிறது. இச்சட்டத்தால் இரவு நேரங்களில் வீடுகளிலேயே தங்கி நன்னடத்தை பெற்றால் குற்றப்பரம்பரைச் சட்டப் பிடியிலிருந்து (CTA) தன்னை விலக்கிக் கொள்ள வாய்ப்புண்டு. ஏற்கனவே, அப்பிடியிலிருந்து பல கள்ளர்களை நான் நீக்கியுள்ளேன். அந்த எண்ணிக்கை இன்னும் அதிகரிக்கலாம். ஆடு, மாடு திருடுவது போன்ற ஏனைய பழக்கங்கள் இன்னும் இவர்களிடம் அதிகமாக உள்ளது. கீழ்நாட்டுக் கள்ளர்களைப்போல் தாங்களும் திருந்திக் கொள்ள வேண்டுமென்று மேல்நாட்டு பிரமலைக்கள்ளர்கள் இன்னும் நினைக்கவில்லை. இச்சட்டத்தின்மீது பிரமலைக்கள்ளர்கள் மிகவும் வெறுப்போடு இருக்கிறார்கள். தாங்கள் வாழும் கிராமங்களுக்கு திருடர்கள் வராமல் இருக்க வேண்டுமென்றால் இவர்கள் தங்களைத் தாங்களே திருத்திக் கொள்ள வேண்டும். தற்போது இச்சட்டத்தை ஒரு கிராமத்தில் புகுத்த வேண்டுமானால், அந்த கிராமத்தில் உள்ளவர்கள் செய்த குற்றங்கள், தண்டனைகள் ஆகியவை பற்றிய புள்ளி விவரங்களை கணக்கெடுக்க மிகவும் சிரமமாக இருக்கும் என்பது கள்ளர்களுக்குத் தெரியும். எனவே காவல்துறை அதிகாரிகளை நான் கலந்தாலோசித்த பின்னர் பிரமலைக்கள்ளர் வகுப்பு முழுவதையும் குற்றப்பரம்பரையினர் என்று அறிவிக்க வேண்டுமென்று

கேட்டுக் கொள்கிறேன். அவர்கள் குற்றவாளிகள்தான் என்பதில் எந்தவித கருத்து வேறுபாடும் இல்லை. துணைக்காவல்துறை கண்காணிப்பாளர் கொடுதத கணக்கின்படி இதுவரை 1800 பிரமலைக்கள்ளர்கள் தண்டனை பெற்றுள்ளனர் என்று கணக்கிடப்பட்டுள்ளது. ஆனால் இது அவர்கள் செய்கின்ற குற்றங்களில் 10இல் ஒரு பங்குதான். உதாரணமாக, ஒரு ஜோடி மாடுகள் திருடு போனதென்றால் அன்று இரவே கையும், களவுமாக திருடர்களைப் பிடித்தால்தான் மாடுகளை மீட்க முடியும், இல்லையென்றால் அம்மாடுகள் தொலைதூரத்திற்கு கொண்டு செல்லப்படும். பிறகு துப்புக்கூலி (Tuppukkuli) முறையில் மூன்றாவது கள்ளர் நபரை வைத்து பேரம் பேசி அந்த மாடுகளின் விலையில் பாதி விலையைக் கொடுத்து மாட்டு உரிமையாளர்கள் மாடுகளை மீட்பது வழக்கம். அவ்வாறு பணம் கொடுக்கவில்லை என்றால் அம்மாடுகளைத் திரும்பப் பெற முடியாது. இவ்வாறான 10 நிகழ்ச்சிகளில் 9 நிகழ்ச்சிகளில் ஆடு, மாடுகள் பணம் கொடுத்து திரும்பப் பெறப்பட்டுள்ளன. இவ்வாறு பணம் கொடுக்காமல் மாட்டின் உரிமையாளர்கள் காவல்துறையில் புகார் செய்தால், அவர்களுடைய ஆடு, மாடுகள் தீக்கிரையாகிவிடும். இந்த மோசமான முறையை ஒழித்துக்கட்டி, கள்ளர்களை ஒரு கட்டுப்பாட்டிற்குள் வைக்க, குற்றப்பரம்பரைச் சட்டத்தை அறிமுகப்படுத்த வேண்டியது அவசியமாகின்றது."[6]

"பிரமலைக்கள்ளர்கள் அனைவர் மீதும் இச்சட்டம் அறிமுகப்படுத்தப் படவேண்டுமென்று நான் சிபாரிசு

செய்தாலும், பிரமலைக்கள்ளர் வகுப்பைச் சார்ந்த அனைவரையும் பதிவு செய்ய வேண்டுமென்று நான் கூறவில்லை. இருந்தாலும் வயது வந்த அனைத்து ஆண்களையும் இச்சட்டத்தின் கீழ் கொண்டு வர வேண்டும், இந்தச் சட்டம் பிரமலைக்கள்ளர்கள் வாழுகின்ற எல்லா கிராமங்கள் மீதும் அமுல்படுத்தப்பட வேண்டுமென்று நான் சிபாரிசு செய்தாலும், இச்சட்டத்தை ஒவ்வொரு கிராமமாக செயல்படுத்த வேண்டும். அதவாது, எந்த கிராம மக்கள் தங்களைத் திருத்திக் கொள்ள, தங்களிடமுள்ள இளைஞர்களை படையில் (Army) சேர்க்க மற்றும் கூலி வேலைக்கு அனுப்ப மறுக்கிறார்களோ, அந்தக் கிராமத்தின் மீது இச்சட்டத்தைப் புகுத்த வேண்டும். குற்றப்பரம்பரைச்சட்டத்தின் கீழ் பிரமலைக்கள்ளர்களை பதிவு செய்யும் காலத்தை அதிகமாக ஆக்க வேண்டும். ஏனென்றால், அவர்கள் மீது தனித்தனியாக, ஒவ்வொரு கிராமமாக இச்சட்டத்தை புகுத்த வேண்டும். இத்தகைய முறையில் இச்சட்டத்தை புகுத்துகிற வகையில் உத்தரவு பிறப்பிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்." [7]

"இவ்வாறு பிரமலைக்கள்ளர்கள் மீது முழுமையாக இச்சட்டத்தைப் புகுத்துவதால் மறைமுகமான ஒரு நல்ல விளைவு ஏற்படும். அதாவது கூடலூர் சீர்திருத்த முகாமுக்கென்று (Gudalore Criminal Settlement) ஒதுக்கப்பட்டுள்ள 1800 ஏக்கர் நிலம், குறிப்பாக கள்ளர்களுக்காக ஒதுக்கப்பட்டதுதான். இப்போது இந்த சீரமைப்பு முகாமிற்கு வந்தால் காவல்துறையின் கண்காணிப்பு அதிகமாக இருக்கும் என்று அஞ்சுகின்ற

கள்ளர்கள், தங்களுடைய கிராமங்களிலும் இச்சட்டம் புகுத்தப்பட்டு காவல்துறையின் கண்காணிப்பு அதிகரிக்கும் என்ற நிலை ஏற்படும்போது தாங்களாகவே கூடலூர் சீரமைப்பு முகாமிற்குச் செல்ல முன்வருவார்கள், அங்கு அவர்களைத் திருத்த வாய்ப்பு அதிகமுண்டு" என்று Paddison என்பவர் அரசு செயலருக்கு அறிக்கை அனுப்பினார். அந்த அறிக்கையின் அடிப்படையில், சென்னை மாகாண அரசால் பிரமலைக்கள்ளர் வகுப்பினர் அனைவரும் குற்றப்பரம்பரையினர் என்று பிரகடனப் படுத்தப்பட்டனர்.[8]

மதுரை மாவட்ட நீதிபதி Paddison அவர்களின் அறிக்கையின்படி பிரமலைக்கள்ளர்கள் திருடர்கள் என்று கூறினாலும் அவர்களுடைய திருட்டுப் பழக்கம் பொருளாதாரத் தேவைக்காக அல்ல என்பது தெளிவாகிறது. ஏனென்றால் அவர் மேற்கோள்காட்டியுள்ள மாவட்டக் கஷட்டியர்கள் மற்றும் எட்கார் தர்ஸ்டனின் Caste and Tribes of Southern India என்ற நூலில் Theft is not their occupation ... principal recreation என்று கூறியிருக்கிறார்கள். எனவே, அவர்களைத் திருடர்கள் என்று முடிவுகட்டி இச்சட்டத்தின்கீழ் கொண்டு வந்தது சரியல்ல. எனவே, பிரமலைக்கள்ளர்கள் செய்த திருட்டுக்குற்றங்கள் ஆடு, மாடு திருடுவதுதான் என்பதை Paddison ஒப்புக்கொண்டிருக்கிறார். அதுகூட தங்களுடைய பொருளாதாரத் தேவையை பூர்த்தி செய்து கொள்வதற்காக அல்ல, அவர்கள் பாரம்பரியமாக அனுபவித்து வருகிற காவல்முறையை வேறு இனத்தைச் சார்ந்தவர்கள் மதிக்காதபோது, தங்களுடைய திறமையைக்

காட்டவும், பிற இனத்தவர்கள் பரம்பரையாக இருந்து வந்த பாரம்பரியக் காவல்முறையை ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதற்காகவும் செய்த திருட்டுக் குற்றங்கள்தான் இது ஒரு வகையில் தங்கள் அதிகாரத்தை பிறர் மீது திணிக்கின்ற அணுகுமுறையாகும். இதைத்தான் Paddison பிரமலைக்கள்ளர்கள் செய்வது திருட்டுக் குற்றங்கள் என்பதற்காக இச்சட்டத்தை அவர்கள் மீது புகுத்துவது சரியல்ல என்று கூறுகிறார். பிரமலைக்கள்ளர்களிடம் இருந்த காவல்முறையானது ஆங்கிலேய போலீஸ் இலாகாவிற்கு ஒரு சவாலாக இருந்து வந்தது. இதனை Paddison தனது அறிக்கையில் கூறுகின்றபோதுகூட பிரமலைக்கள்ளர்கள் செய்த 10 திருட்டுகளில் 9 திருட்டுகள் துப்புக்கூலி முறையில் திருட்டுப்போன பொருட்கள் மீட்கப்பட்டன என்பதை ஒப்புக் கொள்கிறார். மேலும், திருடு கொடுத்தவர் காவல்துறையை அணுகினால் திருட்டுப் பொருள் கிடைக்காது என்பது எல்லோருக்கும் தெரிந்த உண்மை. எனவே காவல்துறை தன்னுடைய அதிகாரத்தை கள்ளர் நாட்டில் செலுத்த முடியவில்லை.

எத்தனையோ பாளையக்காரர்களையும், அரசர்களையும் போரில் முறியடித்து இந்தியாவைக் கைப்பற்றிய ஆங்கிலேயர், மதுரை மாவட்டத்தில் வாழ்ந்த தன்னரசு கள்ளர்களின் காவல்முறை போன்ற பாரம்பரியமிக்க உரிமையை, ஆட்சி அதிகாரத்தால் அடக்க முடியவில்லை. எனவே, இவர்களை அடக்குவதற்காக கண்டுபிடிக்கப்பட்ட ஒரு சட்டம்தான் குற்றப்பரம்பரைச் சட்டம் என்று David Arnold என்பவர் கூறுகின்றார். [9]

இக்காவல் முறையை பாரம்பரியமாக ஏற்றுக் கொண்டு வாழ்ந்து வந்தவர்கள் இடையர் என்ற கோனார் வகுப்பினர் மற்றும் நாடார்கள் ஆவர். ஆனால் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் இந்தக் காவல் முறையை கட்டுப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு ஆங்கிலேய போலீஸ் இலாகாவினரும், கிறிஸ்தவ பாதிரியார்களும் கள்ளர் காவல்முறையை எதிர்க்க வேண்டும் என்றும், கள்ளர்களுக்கு காவல் கூலி கொடுக்கக் கூடாது என்றும் கோனார்கள் மற்றும் நாடார் இனத்தவர்களைத் தூண்டினார்கள். இதன் விளைவாக 1896இல் திண்டுக்கல் வட்டாரத்தில் கள்ளர்களுக்கும், கோனார்களுக்கும் இடையே கலவரம் மூண்டது. அதேபோன்று 1899ஆம் ஆண்டு சிவகாசியில் நாடார்களுக்கும், நாடார் அல்லாத பிற மேல் ஜாதியினருக்குமிடையே பெரும் கலவரம் ஏற்பட்டது. இக்கலவரத்தில் நாடார் அல்லாதவர்களில் பெரும் பங்கு வகித்தவர்கள் மறவர்களும், கள்ளர்களும் ஆவர். எனவே, இந்தக் காவல் தொடர்பான குற்றங்களை செய்துவரும் கள்ளர்களை அடக்குவதற்கு குற்றப்பரம்பரைச் சட்டமே சிறந்தது எனக் கருதி இச்சட்டத்தை அவர்கள் மேல் புகுத்தினர். [10]

மேலும் இக்கள்ளர்கள், பல வேளைகளில் மிகுந்த காவலுக்கிடையே ஆட்சியாளர்களின் கண்ணை மறைத்து பல வீரதீரச் செயல்களை செய்துள்ளார்கள் என்பதற்கு 2 உதாரணங்களைக் கூறலாம். 1) ஆங்கிலேய படைத்தளபதி ராபர்ட் கிளைவ் திருச்சியில் முகாமிட்டிருந்தபோது அவருடைய படையில் இருந்த குதிரைகளை ஒரு கள்ளர்

“திருடிக்கொண்டு வந்துவிட்டார்”. இந்நிகழ்ச்சி படைமுகாமில் பல படைவீரர்கள் மத்தியில் இருந்த குதிரைகளைத் திருடிய கள்ளரின் வீரத்தையும், திறமையையும் காட்டுகிறதே தவிர, அவரது பொருளாதார தேவையை அல்ல என்பதைக் காட்டுகிறது.[11] 2) மதுரையில் திருமலை நாயக்கர் ஆட்சியில் இருந்தபோது, பிரமலைக்கள்ளர்கள் அவருக்கு வரி செலுத்த மறுத்தனர். இதுகுறித்து பிரச்சனைகள் எழுந்தபோது ஊராண்ட உரப்பனூரைச் சேர்ந்த பின்னத்தேவன் என்பவர் திருமலை நாயக்கரிடம் சவால் விடுகின்றார். அதாவது, திருமலை நாயக்கர் தன் மனைவியுடன் தூங்கிக் கொண்டிருக்கும் போது அவரது படுக்கையறையில் நுழைந்து அவர் மனைவி அணிந்திருந்த முத்துமாலையை, ஒரு குறிப்பிட்ட நாளில் திருடி, மன்னரிடமே ஒப்படைப்பதாக சவால் விடுகின்றார். எனவே, திருமலை நாயக்கர் அக்குறிப்பிட்ட நாளில் தன் அரண்மனையைச் சுற்றி பலத்த பாதுகாப்பு செய்கின்றார். இத்தகைய பாதுகாப்புக்கு இடையிலேயும் உடும்பின் உதவியோடு திருமலை நாயக்கர் அரண்மனையின் வெளிச்சுவற்றின் உச்சியில் கன்னமிட்டு, அத்துவாரத்தின் வழியாக அரண்மனைக்குள் நுழைந்து மன்னரின் படுக்கையறையில் தூங்கிக் கொண்டிருந்த இராணியின் முத்துமாலையை கழற்றிக் கொண்டு தப்பிவிட்டார். மறுநாள் திருமலை நாயக்கர் அரண்மனைக்கு பின்னத்தேவன் வந்து அந்த முத்துமாலையை மன்னரிடம் சமர்ப்பித்தார். பின்னத்தேவனின் வீரத்தை மெச்சிய மன்னர், எட்டு கள்ளர் நாடுகளில் ஒன்றான உரப்பனூர் பின்னத்தேவனுக்கு

வரிவிதிப்பிலிருந்து விலக்களித்ததோடு மட்டுமல்லாமல், கள்ளர் நாட்டை தன்னரசாக ஆட்சி செய்யவும் அனுமதித்தார்.[12] எனவே, கள்ளர்கள் செய்யும் திருட்டுத் தொழிலானது பொருளாதார தேவை கருதி அல்ல, தன்னுடைய திறமையை வெளிப்படுத்த உதவிய காவல் முறையில் தங்களுக்கு இருந்து வந்த உரிமையை மறுக்கும் மற்றவர்களை பணிய வைக்கவே செய்தார்கள் என்பது தெரிய வருகிறது.

இதே போன்று 1764ஆம் ஆண்டு கேப்டன் ரும்லே (Rumley) என்பவர் மேலூர் கள்ளர்களை அடக்க 5 பட்டாளங்களை பயன்படுத்தி 5000க்கும் மேற்பட்ட கள்ளர்களை கொன்று குவித்தார். நேரிடையாக போரிட்டு தோல்வி கண்ட கள்ளர்கள் கொள்ளையடிப்பதையும், திருடுவதையும், ஒரு கொரில்லா போர் முறையாக கையாண்டனர். [13]

இதன் அடிப்படையில் பார்க்கின்றபோது, கள்ளர்களின் வீரதீரச் செயல்களாலும், கள்ளர்கள் கடைபிடித்து வந்த காவல்முறை ஆங்கிலேயரின் ஆட்சியின் காவல்துறைக்கு ஒரு சவாலாக இருந்த காரணத்தாலும், பல பாளையக்காரர்களையும், அரசர்களையும் போர் செய்து ஒழித்துக் கட்டினாலும், தன்னரசு ஆட்சி செய்து வரும் இக்கள்ளர்கள் மீது தங்களுடைய அதிகாரத்தை செலுத்த முடியவில்லை என்று கருதிய ஆங்கிலேய அரசு ஒட்டு மொத்த பிரமலைக் கள்ளர்கள் மீது 1911ஆம் ஆண்டின் குற்றப் பரம்பரைச் சட்டத்தை புகுத்த முயன்ற அந்த

வேளையில்தான் பெருங்காமநல்லூர் கலவரம் வெடித்தது. அதுபற்றி மற்றொரு அத்தியாயத்தில் பார்ப்போம்.

## NOTES

1. **History of Madras Police Centenary 1859-1959,** Madras, 1957, p.522.
2. G.O. No.1023, Home (Judicial), dated 10.5.1914.
3. Ibid.
4. G.O. No. 2233, Home (Judicial), dated 16.9.1915.
5. G.O. No. 1331, Home (Judicial), dated 16.9.1918.
6. Ibid.
7. Ibid.
8. Ibid.
9. David Arnold, **Police Power and Colonial Rule, Madras, 1859-1947,** Oxford University Press, Madras 1986, p.140
10. Ibid.
11. Op.cit., p.522
12. Muthu Thevar P. **Muvendarkula Thevar Samuha Varalaru (T).,** Kakuveeran Publishers, Madurai, 1975, pp.215-217
13. Ibid., p.531.

## பாகம் - 2

# இந்தியாவில் ஆங்கில ஆதிக்க வளர்ச்சியும், தமிழ் நாட்டில் நடைபெற்ற ஆரம்பகால எதிர்ப்புகளும்

வாஸ்கோடகாமா என்பவரால் இந்தியாவிற்கு கடல்வழி கண்டுபிடித்த பின்னர் ஐரோப்பியர்கள் குறிப்பாக போர்ச்சுக்கீசியர்கள், டச்சு மக்கள், பிரான்சு மற்றும் இங்கிலாந்து நாட்டினர் இந்தியாவில் வியாபாரம் செய்யும் நோக்கத்தோடு இந்தியாவிற்கு வந்தனர். கி.பி. 1600ஆம் வருடம், டிசம்பர் 31ஆம் நாள் (அதாவது இங்கிலாந்து இராணி எலிசபெத் ஆட்சியின் போது) இந்தியா போன்ற கீழை நாடுகளில் வியாபாரம் செய்ய அமைக்கப்பட்ட கிழக்கிந்திய கம்பெனிக்கு 'உரிமைச்சாசனம்' வழங்கப்பட்டது. இதன் அடிப்படையில் அங்குமிங்குமாக பல வியாபார தலங்களை அமைத்த ஆங்கிலேய கிழக்கிந்திய கம்பெனி, சில கால கட்டங்களில் இந்திய மன்னர்களோடும், பிரெஞ்சு கிழக்கிந்தியக் கம்பெனியோடும் சண்டையிடும் சூழ்நிலை ஏற்பட்டது. அவ்வாறு செய்த சண்டைகளில் குறிப்பிடத்தக்க சண்டை எது என்று பார்த்தால் அவை 1. மூன்று கர்நாடகப் போர்கள், 2. பிளாசிச் சண்டை, 3. பக்சார் சண்டை. 4. தென்னாட்டில் நடைபெற்ற நான்கு மைசூர் போர்கள் ஆகியவையாகும்.

இவைகளில் கர்நாடகப் போர் என்பது ஆற்காடு நவாபை மையமாக வைத்து நடைபெற்ற ஒன்றாகும். ஆற்காடு நவாபாக யாரை நியமிப்பது என்ற சிக்கல்

தோன்றிய போது, ஆங்கிலேயர் ஒருவரை ஆதரித்ததாலும், பிரான்சு மற்றொருவரை ஆதரித்ததாலும் ஏற்பட்டதன் விளைவே 1746 முதல் 1763 வரை செய்து கொண்ட கர்நாடகப் போர் ஆகும். 1763இல் நடைபெற்ற பாரீஸ் ஒப்பந்தத்தின் அடிப்படையில் இந்தியாவில் இருக்கின்ற தன்னுடைய குடியேற்றப் பகுதிகளில் பிரான்சு எவ்வித படை பலத்தையும் வைத்துக் கொள்ளக் கூடாது என்று ஒப்பந்தம் செய்யப்பட்டது. எனவே ஆங்கிலேயர்களின் முக்கிய எதிரியாகக் கருதப்பட்ட பிரான்சு, இந்தியாவில் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநிறுத்த முடியவில்லை. போர்ச்சுகீஸ் நாட்டினர் கோவா, டையூ, டாமன் ஆகிய பகுதிகளில் மட்டும் குடியேற்றங்களை அமைத்துக் கொண்டனர். அதற்கு மேல் அவர்களால் விரிவுபடுத்த முடியவில்லை. டச்சு நாட்டினர் தரங்கம்பாடி போன்ற சிறிய பகுதியை மட்டும் தன்னகத்தே கொண்டு ஆட்சி செய்தனர். ஆனால் ஆங்கிலேய கிழக்கிந்திய கம்பெனிக்கு பணபலமும், கப்பல் வலிமையும் இருந்த காரணத்தால் இந்தியா முழுவதையும் தன் ஆதிக்கத்தின்கீழ் கொண்டு வந்தது. அவ்வாறு கொண்டுவர அப்போதைய அரசியல் சூழ்நிலையும் அவர்களுக்கு சாதகமாக இருந்தது.

தமிழ்நாட்டில் நடைபெற்ற போரில் வெற்றி பெற்ற ஆங்கிலேயர், வடக்கே வங்காளத்தில் முதலில் பிளாசிச் சண்டையிலும், பின்னர் பக்சார் சண்டையிலும் ஈடுபட்டு வெற்றி பெற்றனர். இச்சண்டைக்குப் பின்னர், டெல்லியில் முகலாயப் பேரரசர் ஷா ஆலம் 1765ஆம் ஆண்டு ஆங்கிலேயருடன் ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொண்டு,

திவானி உரிமையை கிழக்கிந்திய கம்பெனிக்கு வழங்கினார். இவ்வாறு கிழக்கிந்திய கம்பெனி வரி வசூலிக்கும் உரிமையான திவானி உரிமையைப் பெற்றதிலிருந்து, கிழக்கிந்திய கம்பெனிக்கு படிப்படியாக அரசியல் அதிகாரம் கிடைக்கப் பெற்றது. ஒவ்வொரு தலைமை ஆளுநரின் ஆட்சிக் காலத்தின் போதும் பல திட்டங்களை உருவாக்கி, குறிப்பாக அவகாசியிலிக் கொள்கை, துணைபடைத்திட்டம், போன்றவைகளைப் புகுத்தி இந்திய மன்னர்களுக்கு இருந்து வந்த அதிகாரங்களைக் ஆங்கிலேயர் குறைத்தனர்.

தென்னாட்டைப் பொறுத்தமட்டில் ஹைதர்அலி, திப்பு சுல்தான் போன்றவர்களோடு போரிட்டு, அவர்களைக் கொன்று தங்கள் ஆதிக்கத்தை ஆங்கிலேயர் நிலை நிறுத்தினர். 1799ஆம் ஆண்டு தமிழ்நாட்டில் பாளையக்காரர்களோடு போரிட்டு 1800-01இல் மருது பாண்டியர்களை வென்று, சென்னை மாகாணத்தை கிழக்கிந்திய கம்பெனி அமைத்தது. இத்தருணத்தில் ஆங்கிலேயர் ஏன் கட்டபொம்மன் போன்ற பாளையக்காரர்களோடு போர் செய்தார்கள் என்பதை விளக்குவது பொறுத்தமாகும்.

மதுரையில் நாயக்கர்கள் ஆட்சியில் இருந்தபொழுது, குறிப்பாக இராணி மங்கம்மாள் ஆட்சியின்போது இஸ்லாமிய படையெடுப்பு நடந்தது. டெல்லியை ஆட்சி செய்து வந்த ஔரங்கசீப் என்ற மொகலாயப் பேரரசர் காலத்தில் ஜீல்பிகர்கான் என்ற படைத்தளபதியின் கீழ் தக்காண படையெடுப்பை மொகலாயர் நடத்தினர். மைசூர் மன்னர்

அவருடன் போரிட மறுத்து சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டார். அதேபோல் தஞ்சாவூர் நாயக்கரும் ஜீல்பிகர்கானுடன் போர் செய்யாமல் சமாதானம் செய்து கொண்டு ஔரங்கசீப்பை அரசராக ஏற்றுக் கொண்டு கப்பம் கட்ட ஒப்புக் கொண்டார். எனவே, ஜீல்பிகர்கான் மதுரை வந்தபோது இராணி மங்கம்மாளும் அவருடன் போர் செய்ய அஞ்சி சமாதானம் செய்து கொண்டார். இதன்படி இராணி மங்கம்மாள் டெல்லி பேரரசர் ஔரங்கசீப்பை தன்னுடைய பேரரசராக ஏற்றுக்கொண்டு, பேரரசிற்கு ஆண்டு ஒன்றுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை கப்பமாக செலுத்துவது என்று ஒப்புக் கொண்டார். இந்த வரிகளை வசூலிப்பதற்காக ஜீல்பிகர்கான் ஆற்காட்டில் நவாப் பதவி ஒன்றையும், ஹைதராபாத்தில் நிஜாம் பதவி ஒன்றையும் நிறுவினார்.

மதுரையில் இராணி மங்கம்மாள் இவ்வாறு உடன்படிக்கை செய்து கொண்ட காரணத்தால், நாயக்கர் ஆட்சி இன்னும் சில ஆண்டுகள் நீடித்தது. இராணி மங்கம்மாள் ஆட்சிக்குப் பின் அவருடைய பேரன் விஜயரங்க சொக்கநாதன் ஆட்சிக்கு வந்தார். ஆட்சிக்கு வந்த சில ஆண்டுகளில் விஜயரங்க சொக்கநாதன் இறந்துவிட்ட காரணத்தால், அவருடைய மனைவி மீனாட்சி ஆட்சிக்கு வந்தார். மீனாட்சிக்கும், சொக்கநாதனுக்கும் குழந்தை இல்லாத காரணத்தால் அவர்களுடைய வளர்ப்பு மகன் பங்காரு திருமலை, வாரிசு உரிமைப் போரில் ஈடுபட்டார். அப்பொழுது ஆற்காடு நவாப், பங்காரு திருமலைக்கு சாதகமாக, சந்தாசாகிப் தலைமையில் ஒரு படையை அனுப்பி, மீனாட்சியோடு போரிட்டு மீனாட்சியை

கைது செய்தார். இதனால் மீனாட்சி தற்கொலை செய்து கொண்டார். மீனாட்சியின் மரணத்தோடு மதுரையில் நாயக்கர் ஆட்சி முடிவுக்கு வந்தது.

மதுரை நாயக்கர் ஆட்சியின் கீழ் பல பாளையங்கள் இருந்தன. இப்பாளையக்காரர்கள் அனைவரும் தங்கள் பாளையத்திற்கு வருகின்ற வருமானத்தில் 3ல் 1 பங்கு வரியை மதுரை நாயக்கருக்கு கொடுத்து வந்தனர். நாயக்கர் ஆட்சி முடிந்த பின்னர் இந்த பாளையக்காரர்கள் ஆற்காடு நவாபிற்கு இந்த வரியை செலுத்த வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. இதற்கு காரணம், இராணி மங்கம்மாளும், ஜீல்பிகர்கானும் செய்து கொண்ட ஒப்பந்தப்படி மதுரை நாயக்கர் அரசு ஆற்காடு நவாபிற்கு வரி செலுத்த வேண்டும். தற்போது நாயக்கர் அரசு இல்லாத காரணத்தால், நாயக்கர் அரசுக்குக் கீழே இருந்து வந்த பாளையக்காரர்கள், மதுரை நாயக்கருக்கு செலுத்த வேண்டிய வரியை ஆற்காடு நவாபுக்குச் செலுத்தி வந்தனர்.

கர்நாடகப் போர்களில் ஆற்காடு நவாப் முகமது அலிக்கு ஆங்கிலேயர்களின் ஆதரவு இருந்த காரணத்தால் 1763ஆம் ஆண்டுக்கு பின்னர் அவர் ஆங்கிலேயரின் நெருங்கிய நண்பராக இருந்து வந்தார். முகமது அலிக்கு பணத்தேவை ஏற்படும்போதெல்லாம் ஆங்கிலேயரிடம் அதிக வட்டிக்கு கடன் பெற்று வந்தார். கடன் அதிகமாக அதிகமாக பிரச்சனை ஏற்பட்டதால், முகமது அலி 1792ஆம் ஆண்டு ஆங்கிலேயருடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார். அதன்படி, தான் ஆங்கிலேயருக்கு செலுத்த

வேண்டிய கடனுக்கு பதிலாக, பாளையக்காரர்களிடம் தனக்கு இருந்து வந்த வரிவசூலிக்கும் உரிமையை ஆங்கிலேயர்களுக்கு கொடுத்துவிட்டார். இவ்வாறாக வரிவசூலிக்கும் உரிமையை ஒப்பந்தம் மூலமாக கிடைக்கப்பெற்ற கிழக்கிந்திய கம்பெனி, கட்டபொம்மன் போன்ற பாளையக்காரர்களிடம் வரி வசூலிக்கத் தொடங்கியது. அப்போது பல பாளையக்காரர்கள் வரி செலுத்தினர். சிலரால் வரியைக் கட்ட முடியவில்லை. சிலர் வரி கட்ட மறுத்தனர்.

இவ்வாறு வரி கட்ட மறுத்தவர்களில் முக்கியமானவர் இராமநாதபுரம் முத்துராமலிங்க சேதுபதி ஆவார். ஏனென்றால் இராமநாதபுரம், மதுரையை ஆண்டு வந்த நாயக்கர் ஆட்சிக்குட்பட்ட ஒரு சேதுபதி அரசாகும். திருமலை மன்னர் காலத்தில் இராமநாதபுரததில் ஆட்சியில் இருந்து வந்த ரகுநாத சேதுபதி, மதுரை அரசோடு நல்லுறவு கொண்டு இருந்தார். ஆனால் இராணி மங்கம்மாள் மதுரையில் ஆட்சியில் இருந்தபோது, இராமநாதபுரத்தில் ஆட்சியில் இருந்த கிழவன் சேதுபதி, இராணி மங்கம்மாளைத் தோற்கடித்து இராமநாதபுரத்தை சுதந்திர நாடாக பிரகடனப்படுத்திக் கொண்டார். அதன்பின்னர் மதுரைக்கோ, வேறு யாருக்கோ வரி செலுத்தாத அரசாக இராமநாதபுரம் இயங்கி வந்தது. இராணி மங்கம்மாள், ஜீல்பிகர்கானுடன் செய்துகொண்ட ஒப்பந்தப்படி, இராமநாதபுரம் அரசு ஆற்காடு நவாபிற்கு வரி செலுத்தவில்லை. செலுத்த வேண்டிய தேவையும் இல்லை. எனவே, ஆற்காடு நவாப் தன்னுடைய வரி வசூலிக்கும்

உரிமையை 1792ஆம் ஆண்டு செய்து கொண்ட ஒப்பந்தப்படி ஆங்கிலேயருக்கு கொடுத்திருந்த போதும், இராமநாதபுர சேதுபதி கிழக்கிந்தியக் கம்பெனிக்கு வரி செலுத்த வேண்டிய அவசியமில்லை. இச்சூழ்நிலையில் முத்துராமலிங்க சேதுபதியை ஆங்கிலேய கிழக்கிந்தியக் கம்பெனி வரி கொடுக்க கட்டாயப்படுத்தியபோது, முத்துராமலிங்க சேதுபதி ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிட்டார். இவர் செய்த போர்தான் உண்மையான ஆங்கிலேயர் எதிர்ப்புப் போர் ஆகும். அப்போரில் முத்துராமலிங்க சேதுபதி கைது செய்யப்பட்டு பல ஆண்டுகள் சிறையில் அடைக்கப்பட்டார்.

இதற்கடுத்தப்படியாக ஆங்கிலேயர், பாஞ்சாலங் குறிச்சியை ஆட்சி செய்து வந்த வீரபாண்டிய கட்டபொம்மனுடன் 1797ஆம் ஆண்டிலும் பின்னர் 1799ஆம் ஆண்டிலும் சண்டையிட்டு கட்டபொம்மனைத் தோற்கடித்தனர். இச்சண்டைக்கு காரணம் கிழக்கிந்திய கம்பெனி கட்டபொம்மனை வரி செலுத்துமாறு கட்டாயப்படுத்தியதே ஆகும். 1792ஆம் ஆண்டு ஒப்பந்தப்படி, ஆங்கிலேயர் ஒவ்வொரு ஆண்டும் வரியை கேட்டுக் கொண்டே இருந்தனர். வீரபாண்டிய கட்டபொம்மனால் வரியை செலுத்த இயலவில்லை. காரணம் இக்காலகட்டத்தில் நாட்டில் வறட்சி நிலவியது. எனவே தன்னுடைய நாட்டு மக்களிடம் வரியை வசூலிக்க முடியவில்லை. இத்தகைய வறட்சிக் காலங்களின்போது நாயக்கர் ஆட்சிக் காலத்திலும், நாயக்கருக்குப்பின் வரிவசூல் செய்து வந்த ஆற்காடு நவாப் காலத்திலும்,

பாளையக்காரர்கள் வரி செலுத்தியது கிடையாது. ஆனால், ஆங்கிலேயர் வரி வசூலிக்கும் உரிமையைப் பெற்ற பின்னர் ஒவ்வொரு ஆண்டும் இவ்வளவு வரி வசூலிக்க வேண்டும் என்று கணக்கிட்டு வசூலிப்பது வழக்கம். இம்முறையில் வறட்சியால் பாதிக்கப்பட்ட காலமாக இருந்தாலும் சரி; வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட காலமாக இருந்தாலும் சரி; பாளையக்காரர்கள் தங்கள் வரியைச் செலுத்த வேண்டும். இத்தகைய சூழ்நிலையில் கட்டபொம்மனிடம் ஆங்கிலேயர் மீண்டும் மீண்டும் வரி கேட்டு துன்புறுத்த கட்டபொம்மனோ வரியை கட்ட மறுத்து வந்தார். எனவே கி.பி. 1797ஆம் ஆண்டு கலெக்டர் ஜாக்சன் என்பவர், பாக்கி வரியை குறிபிட்ட தேதிக்குள் செலுத்தாவிட்டால் ராணுவ நடவடிக்கைக்கு உட்பட நேரிடும் என்று கட்டபொம்மனுக்கு எச்சரிக்கை விடுத்தார். எனவே, வீரபாண்டிய கட்டபொம்மன் அக்கம் பக்கத்திலுள்ள பாளையத்தில் வசதி படைத்தவர்களிடம் கொள்ளையடித்து வரி பாக்கியை செலுத்தும் நோக்கத்தோடு, திருநெல்வேலி மாவட்டத்தில் ஜாக்சன் சுற்றுப்பயணம் மேற்கொண்டபோது அவரை பின்தொடர்ந்து 23 நாட்கள் செல்கின்றார். இராமநாதபுரம் சேதுபதி அரண்மனையில்தான் கலெக்டர் ஜாக்சன் தன்னை வீரபாண்டிய கட்டபொம்மன் சந்திக்க அனுமதிக்கிறார். அந்தவேளையில் கட்டபொம்மன் மரியாதைக் குறைவாக நடத்தப்பட்டார். தன்மானம் மிக்க வீரபாண்டிய கட்டபொம்மன், தன்னை அவமதித்த கலெக்டர் ஜாக்சனிடம் ஏன் வரி கொடுக்க வேண்டும் என்று வாக்குவாதம் செய்கின்றார். இதன் காரணமாக ஏற்பட்ட விளைவால்

கட்டபொம்மனை கைது செய்ய ஜாக்சன் உத்தரவிடுகிறார். ஆனால் ஒரு சிறிய சண்டை ஏற்பட்ட பின்னர் வீரபாண்டிய கட்டபொம்மன் பாஞ்சாலங்குறிச்சிக்கு தப்பிச் சென்றுவிட்டார். தப்பிச்சென்ற கட்டபொம்மன் சென்னை மாகாண அரசிடம் ஜாக்சன் மீது புகார் செய்கிறார். இப்புகாரை ஏற்றுக் கொண்ட சென்னை மாகாண அரசு, தங்களுடைய பிரதிநிதியான கலெக்டர் ஜாக்சன் மீது நடவடிக்கை மேற்கொண்டனர். இத்தருணத்தில் சென்னை மாகாணத்தை ஆட்சி செய்து வந்த ஆங்கிலேயர்கள் வீரபாண்டிய கட்டபொம்மன் மீது மேற்கொண்டு நடவடிக்கை எடுக்காமல் கலெக்டர் ஜாக்சன் மீது நடவடிக்கை எடுத்தமைக்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. அதாவது இக்கால கட்டத்தில்தான் ஆங்கிலேயர்கள் மைசூர் போரில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். ஹைதர்அலியின் மரணத்திற்குப் பின்னால் அவர் மகன் திப்பு சுல்தான் ஆங்கிலேயரோடு தீவிரமாக போரிட்டுக் கொண்டிருந்தார். இவ்வேளையில் கட்டபொம்மனோடும் போரிட்டால், ஆங்கிலேயரின் படைபலம் சிதறிவிடும் என்று கருதிய ஆங்கிலேய அரசு, கட்டபொம்மன் மீது அப்போது நடவடிக்கை எடுக்காமல் சிறிது காலம் தள்ளிப் போட்டது. 1799இல் மைசூர் போர் முடிவுற்று, திப்புசுல்தான் மரணமடைந்த பின்னால் கலெக்டர் லூசிங்டன் தலைமையில் கட்டபொம்மன் மீது ஆங்கிலேயர் போர் தொடுத்தனர். இந்நிலையில் கட்டபொம்மன் தப்பித்து புதுக்கோட்டை அரசின் எல்லைக்குள் ஒளிந்து கொண்டார். இவ்வாறு ஒளிந்திருந்த கட்டபொம்மனை புதுக்கோட்டை

மன்னர் சிறைப்பிடித்து ஆங்கிலேயரிடம் ஒப்படைத்தார். இச்சூழ்நிலையில் கட்டபொம்மனைப் பற்றிய பல கேள்விகளுக்கு விடை அளிக்க வேண்டியுள்ளது. அதாவது கட்டபொம்மன் கொள்ளைக்காரரா? கட்டபொம்மன் ஒரு விடுதலை வீரரா? கட்டபொம்மனை ஆங்கிலேயரிடம் ஒப்படைத்த புதுக்கோட்டை மன்னர் ஒரு துரோகியா?

ஆங்கிலேயர்கள் வரி கொடுக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்தியபோதும், வறட்சிக் காலத்தின்போதும், தன்னுடைய பாளையத்திலுள்ள மக்கள் வறுமையில் வாடுகின்றார்கள் என்று கருதிய கட்டபொம்மன் அக்கம் பக்கத்து பாளையத்தில் வாழும் வசதி படைத்தவரிடம் கொள்ளையடித்து ஆங்கிலேயருக்கு வரிகட்ட முயன்றான் என்று கூறப்படுகிறது. இவ்வாறு கொள்ளையடித் திருந்தாலும், அதை கொள்ளை என்று கூறமுடியாது. ஏனென்றால், பண்டைக் காலந்தொட்டு மன்னர் ஆட்சி நிலவி வந்த காலத்தில், அரசுக்கு வருகின்ற வருமானத்தில் ஒன்றாக பிறநாடுகளிலிருந்து அடிக்கும் கொள்ளை வருமானமும் கருதப்பட்டது. எனவே, கட்டபொம்மன் தன் ஆட்சியின் கீழ் இருந்து வந்த பாளையத்து மக்களின் நலனுக்காக, பிற பாளையத்து செல்வந்தர்களை கொள்ளையடித்தது தவறில்லை. ஒரு ஆட்சியாளர் செய்ய வேண்டிய கடமையைத்தான் செய்தார். எனவே, கட்டபொம்மன் கொள்ளைக்காரன் அல்ல, ஒரு வீரன் என்பதில் சந்தேகமில்லை. ஏனென்றால், புதுக்கோட்டை மன்னர் கட்டபொம்மனைப் பிடித்து வைத்துக் கொண்டு, ஒருநாள் அவரைக் கண்காணிப்பதே எவ்வளவு சிரமம்

என்ற ஒரு நிலையை ஆங்கிலேயருக்கு எடுத்துக் கூறியுள்ளார். அத்தகைய மாவீரர் ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிட்டார் என்பது பெருமைதான். ஆனால் அவரை விடுதலை வீரர் என்று சொல்லமுடியாது. காரணம், 1797ஆம் ஆண்டில் பாஞ்சாலங்குறிச்சி ஆங்கிலேயருக்கு அடிமைப்படவில்லை. எனவே, விடுதலை என்ற சொல்லுக்கு இடமில்லை. இரண்டாவதாக வீரபாண்டிய கட்பொம்மன் வரி கொடுக்கக்கூடாது என்ற நோக்கத்தோடு ஆங்கிலேயரை எதிர்க்கவில்லை. வரி கொடுக்க இயலாத காரணத்தால், காலம் தாழ்த்தினார். இதனால் கோபம் அடைந்த ஆங்கிலேயர் போருக்கு தயாரானார்கள். எனவே, கட்டபொம்மனும் போரிட்டார். ஆனால் கட்டபொம்மனுடைய வீரதீர செயல்களை மேற்கோள் காட்டி இந்திய விடுதலை இயக்கத் தலைவர்கள் பிற்காலத்தில் மக்களிடையே ஒரு விடுதலை வேட்கையைத் தூண்டினார்கள்.

18ஆம் நூற்றாண்டில் இந்தியாவை ஆட்சி செய்த மன்னர்களிடையே இந்தியா ஒரு நாடு என்ற எண்ணம் இல்லை. இந்தியா ஆயிரக்கணக்கான சிற்றரசுகளால் ஆளப்பட்டு வந்தது. ஒவ்வொரு சிற்றரசும் அதை ஆட்சி செய்த அரசரும் தங்கள் எல்லைப் பகுதி மற்றும் அதில் வாழ்கின்ற தங்கள் மக்களை மட்டுமே காத்துக் கொள்ள தலைப்பட்டனர். எனவே, அந்த வகையில் புதுக்கோட்டை மன்னரும் தன்னுடைய நாடு; தன்னுடைய மக்கள் என்ற எண்ணத்தில் ஆட்சி செய்து வந்தார். அதன் அடிப்படையில் பல இராஜதந்திர கொள்கைகளை கடைப்பிடித்தார்.

தமிழ்நாட்டில் கர்நாடகப்போர் நடைபெற்றபோது புதுக்கோட்டை அரசு பிரான்சு அரசுக்கு எதிராக ஆங்கிலேயரை ஆதரித்தது. எனவே, ஆங்கிலேயரோடு புதுக்கோட்டை அரசு எப்போதும் நட்புறவோடு நடந்து கொண்டது. எனவே, கட்டபொம்மன் தப்பி புதுக்கோட்டை எல்லைக்குள் ஒளிந்திருந்தபோது புதுக்கோட்டை அரசு தன்னுடைய நீண்டகால நண்பனான ஆங்கிலேயரை ஏமாற்ற விரும்பவில்லை. கட்டபொம்மனை பிடித்துக் கொடுத்து ஆங்கிலேயரின் உண்மையான நண்பர் என்று நிரூபித்த காரணத்ததால் ஆங்கிலேய அரசு புதுக்கோட்டை அரசுக்கு பல சலுகைகளை வழங்கியது. அதன்படி புதுக்கோட்டை அரசு ஆங்கிலேயருக்கு வரி செலுத்த வேண்டாம் என்று வரி விலக்கும் அளித்தது. புதுக்கோட்டை அரசின் இத்தகைய இராஜதந்திரத்தால் புதுக்கோட்டை மக்களும், அரசும் ஒருபோதும் ஆங்கிலேயருக்கு அடிமையாகவில்லை. இந்தியா விடுதலை பெற்ற பின்னரும்கூட புதுக்கோட்டை அரசு சிலகாலம் சுதந்திரமாக செயல்பட்டு வந்தது.

வீரபாண்டிய கட்டபொம்மனை ஆங்கிலேயர் தோற்கடித்த பின்னர் கட்டபொம்மனின் சகோதரர் ஊமைத்துரைக்கு சிவகங்கை மருதுபாண்டியர்கள் அடைக்கலம் கொடுத்தனர். இவ்வாறு மருதுபாண்டியர்கள் கட்டபொம்மனின் தம்பிக்கு அடைக்கலம் கொடுத்ததற்காகவும் வரி வசூலிப்பதற்காகவும் 1800-01இல் ஆங்கிலேயர் சிவகங்கையைத் தாக்கத் தொடங்கினர். சிவகங்கையை ஆண்டு வந்த மருது சகோதரர்கள் 'தீபகற்ப கூட்டணி' என்ற அமைப்பை உருவாக்கி ஆங்கிலேயரை

எதிர்த்தனர். அனைத்து மக்களும் மற்றும் அனைத்து பாளையங்களும் தமக்கு ஆதரவு தர வேண்டும் என்று திருச்சி பேரறிக்கை என்ற ஒரு அறிக்கையினை வெளியிட்டனர். இவ்வாறு மருதுபாண்டியர்கள் வேண்டுகோள் விடுத்து பலர் ஆதரவோடு போரிட்டபோதும் அவர்களால் ஆங்கிலேயரை வெல்ல முடியவில்லை. மருதுபாண்டியர் கொலை செய்யப் படுகின்றனர். அவர்களுடைய மரணத்திற்கு பிறகு தென்னிந்திய புரட்சி முடிவுக்கு வந்தது. இது முதல் விடுதலைப்போர் என்று பேராசிரியர் ராஜையன் கூறுகிறார். இது எந்த அளவிற்கு உண்மை என்று பின்னர் பார்ப்போம்.

1800-01இல் நடந்த இப்புரட்சிக்குப் பின்னர் எல்லா பாளையங்களும் அடக்கப்பட்டு தென்னிந்தியா முழுவதும் உள்ளடக்கிய 'சென்னை மாகாணம்' என்ற ஒரே அமைப்பினை ஆங்கிலேயர் உருவாக்கினர். அவ்வாறு உருவாக்குகின்றபோது தமிழ்நாட்டில் பிரச்சனைக்குரிய பகுதியாக கருதப்பட்ட இராமநாதபுரம், சிவகங்கை, புதுக்கோட்டை ஆகிய இடங்களில் அதே இனத்தைச் சேர்ந்தவர்களை அரசர்களாக ஆங்கிலேயர் நியமித்தனர். இதற்கு காரணம் இப்பகுதியில் கள்ளர், மறவர், அகமுடையர் இனத்தைச்சார்ந்தவர்கள் அதிகமான இருக்கின்றனர். எனவே, இவர்களை அடக்க அதே இனத்தைச் சார்ந்தவர்களால் தான் முடியும் என்று ஆங்கிலேயர் கருதினர்.

சென்னை மாகாணம் என்று உருவாக்கப்பட்ட பின்னர், இம்மாகாணத்தில் இருந்து வந்த பாளையங்கள்

அனைத்தும் இணைக்கப்பட்டன. புதுக்கோட்டை, இராமநாதபுரம், சிவகங்கை போன்ற அரசுகளும் நிலையான படையை வைத்துக் கொள்ள அனுமதிக்கப்படவில்லை. எனவே, இப்பாளையங்களிலும், இந்த அரசுகளிலும் பணியாற்றிய படை வீரர்கள் தங்களுக்கு வேறு தொழில் தெரியாத காரணத்தால் ஆங்கிலேயர் படையில் சேர்ந்தனர். அவ்வாறு சேர்ந்த படைவீரர்கள் தாங்கள் பணியாற்றும் படை ஆங்கிலேயருக்குச் சொந்தமானது; ஆங்கிலேயர்கள் அந்நியர்கள், இதுவரை தங்களுடைய உறவினர்களுக்காகப் பணியாற்றிய தாங்கள், இப்போது அன்னியருக்காகப் பணியாற்றுகிறோமே என்ற வருத்தத்தில் இருந்தனர். இதே வேளையில் ஆங்கிலேய அரசு இந்திய படைவீரர்கள் அனைவருக்கும் சீருடை வழங்கியும், அவர்களை முகச்சவரம் செய்து கொள்ள வேண்டும்; மற்றும் தாடி, கிருதா வைத்துக் கொள்ளக்கூடாது என்றும், நெற்றியில் திருநீறு, குங்குமம் வைத்துக் கொள்ளக் கூடாது என்றும் உத்தரவிட்டது. ஆனால், இந்தியப் படைவீரர்கள் கிருதா, மீசை வைத்துக் கொள்வதே வீரனுக்கு அழகு என்று கருதினர். இவை அனைத்தும் அவர்களுக்கு மறுக்கப்படவே 1806இல் வேலூரில் ஒரு சிப்பாய்க்கலகம் ஏற்பட்டது. ஆனால், சில மணி நேரங்களிலேயே அக்கலகம் அடக்கப்பட்டது.

இதற்கடுத்தபடியாக 1857இல் நடைபெற்ற சிப்பாய்க்கலகம் முக்கியமான ஒன்றாகும். இப்புரட்சியை இந்திய வரலாற்று ஆசிரியர்கள் சிலர் இது இந்தியாவின் முதல் விடுதலைப்போர் என்கின்றனர். தென்னிந்திய

வரலாற்று ஆசிரியர்கள் சிலர் 1800-01ஆம் ஆண்டு நடைபெற்ற மருதுபாண்டியர் புரட்சியை முதல் விடுதலைப்போர் என்கின்றனர். ஆனால், இக்கூற்று உண்மைதானா? என்று பின்னர் ஆராய்வோம்.

1857ஆம் ஆண்டு புரட்சியானது இந்திய சிப்பாய்களால் ஏற்படுத்தப்பட்ட ஒரு புரட்சியாகும். இப்புரட்சிக்கு அடிப்படை காரணம் ஆங்கிலேயச் சிப்பாய்களுக்கும், இந்தியச் சிப்பாய்களுக்கும் கடைபிடிக்கப்பட்டு வந்த வித்தியாசமான கொள்கையே ஆகும். அதாவது ஆங்கிலேய சிப்பாய்களுக்கு குறைந்த காலத்திலேயே பதவி உயர்வு வழங்கப்படும். ஆனால் இந்திய சிப்பாய்களுக்கு பல ஆண்டுகளானால் கூட அத்தகைய பதவி உயர்வுகள் வழங்கப்பட மாட்டாது. மேலும், இந்திய சிப்பாய்கள், ஆங்கிலேய சிப்பாய்களைப் போல சீருடை அணிய வேண்டுமென்றும் மற்றும் அவர்களைப் போல தொப்பி வைத்துக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் கட்டாயப்படுத்தப்பட்டனர். இந்திய சிப்பாய்களுக்கு உணவு மற்றும் மது வகைகள் வழங்குவதில் கூட வித்தியாசமான நடைமுறைகள் கடைபிடிக்கப்பட்டன. எனவே, தனிப்பட்ட முறையில் இந்திய சிப்பாய்களுக்கு பல பாதிப்புகள் ஏற்பட்டன. இதேபோன்று துணைபடைத்திட்டம், அவகாசியிலிக் கொள்கை ஆகியவற்றால் பாதிப்பு அடைந்த நானாசாகிப், பகதூர்ஷா, ஜான்சிராணி லட்சுமிபாய் ஆகியவர்களும் இப்புரட்சியில் குதித்தனர். இப்புரட்சியானது, புரட்சியாளர்களால் திட்டமிட்டு, ஒரு குறிப்பிட்ட தேதியில் ஒரே நேரத்தில் நடத்துவதாக இருந்தது. ஆனால், ஏதோ

ஒரு காரணத்தால், திட்டமிடப்பட்ட தேதிக்கு முன்னதாக மீரட்டிலும், பின்னர் அடுத்தடுத்து டெல்லி, சட்டாரா (Satara), கான்பூர் போன்ற இடங்களிலும் வெவ்வேறு நாட்களில் நடைபெற்றது. எனவே, இப்புரட்சியை அடக்குவது ஆங்கிலேயருக்கு மிக எளிதாகி விட்டது.

இவ்வேளையில் இந்தியாவில் முதல் விடுதலைப்போர் எது என்பதை விவாதிப்பது சரியான ஒன்றாகும். விடுதலைப்போர் என்பது சாதாரணமாக ஒரு நாடு அடிமைப்பட்ட பின்னர் செய்கின்ற போர்தான் விடுதலைப் போர் ஆகும். அப்படி பார்க்கின்றபோது 1800-01ஆம் ஆண்டு நடைபெற்ற மருதுசகோதரர்கள் செய்த புரட்சியை முதல் விடுதலைப் போர் என்று கூற முடியாது. ஏனென்றால் மருது சகோதரர்கள் போரிட்ட காலத்தில் அவர்கள் ஆங்கிலேயரின் அடிமைகள் அல்ல, அவ்வாறே மருது சகோதரர்கள் செய்த போரை முதல் விடுதலைப் போர் என்று கூறுவோமானால் இதுபோன்ற புரட்சியை இதற்கு முன்பு செய்த கட்டபொம்மனையும், அவருக்கு முன்னர் போர் செய்த மைசூரை ஆண்ட திப்பு சுல்தானையும், அவருக்கு முன்னர் புரட்சி செய்த சிவகங்கை முத்துவடுகநாத தேவர் மற்றும் நெற்கட்டும் சேவல் புலித்தேவன் ஆகியோரைத்தான் கூற வேண்டும். ஆனால் இவர்கள் செய்த போர் எல்லாம் சுதந்திரப்போர் அல்ல. இவர்கள் தங்களுடைய ஆட்சிக்கு பாதகம் ஏற்படுகின்ற காலகட்டத்தில்தான் போர் செய்துள்ளனர். இந்தியா ஒரு நாடு என்ற எண்ணமோ, இந்தியாவை விடுவிக்க வேண்டும் என்ற எண்ணமோ இவர்களுக்கு ஏற்பட்டிருக்க

வாய்ப்பில்லை. எனவே 1800-01ஆம் ஆண்டில் மருது சகோதரர்கள் நடத்திய தென்னிந்திய புரட்சியை முதல் விடுதலைப்போர் என்று கூறமுடியாது.

அதேபோன்று 1857ஆம் ஆண்டு புரட்சியையும் முதல் விடுதலைப் போர் என்று கூறமுடியாது. ஏனென்றால் இந்திய சிப்பாய்கள், ஆங்கிலேயர்கள் அந்நியர்கள் எனவே அவர்களை விரட்ட வேண்டும் என்ற நோக்கத்திற்காக புரட்சி செய்தார்கள் என்றால் அது நம்புவதற்கில்லை. ஏனென்றால் ஆங்கிலேய ஆட்சி அந்நிய ஆட்சி என்று தெரிந்தும் ஆங்கிலேயர் அமைத்த படையில் இந்திய சிப்பாய்கள் பணி செய்ய சேர்ந்துள்ளனர். உண்மையிலேயே அந்நியர் ஆட்சி என்று கருதியிருப்பார்களேயானால், அவர்கள் அப்படையில் சேர்ந்திருக்கமாட்டார்கள். அந்நியர் ஆட்சி என்று தெரிந்திருந்தும் அவர்களுக்காகப் போராட அந்நியப் படையில் சேர்ந்த இவர்கள், தங்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளுக்காகத்தான் புரட்சி செய்தார்கள். அதவாது பதவி உயர்வில் ஆங்கிலேயருக்கு ஒரு நீதி, இந்தியருக்கு ஒரு நீதி என்றும், இந்திய வீரர்கள் இந்து முஸ்லீம் முறைப்படி உடையணிய மற்றும் விபூதி போன்றவை வைத்துக் கொள்ள மறுக்கப்பட்ட காரணத்தினாலும், உணவு மற்றும் மது ஆகியவற்றை சிப்பாய்களுக்கு வழங்குவதிலும் ஆங்கிலேயருக்கு சிறப்புச் சலுகை வழங்கிய காரணத்தினாலும் புரட்சியில் ஈடுபட்டார்கள். எனவே, ஆங்கிலேயரை எதிர்க்கும் ஆற்றல் இந்தியர்களுக்கு இருந்தது என்பதற்கு இத்தகைய புரட்சி எடுத்துக்காட்டாக அமையுமே ஒழிய, இப்புரட்சியை முதல்

விடுதலைப் போர் என்று கூறமுடியாது. மேலும் இப்புரட்சியானது பல இடங்களில் நடந்தாலும் ஒரு குறிப்பிட்ட நாளில் நடக்காமல் பல நாட்களில் தனித்தனியாக நடைபெற்ற காரணத்தாலும் ஆங்கிலேயர்கள் எளிதில் இதை அடக்கிவிட்டார்கள்.

அப்படியானால் இந்தியாவின் விடுதலைக்காக பாடுபட்ட முதல் இயக்கம் என்ன என்ற கேள்வி எழும். முதல் விடுதலைக்காக பாடுபட்ட இயக்க ரீதியான ஒரு அமைப்பசை் சொல்ல வேண்டுமானால் அது 1885ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட இந்திய தேசீய காங்கிரஸ் என்பதைத்தான் சொல்ல வேண்டும். இந்த இந்திய தேசிய காங்கிரஸ் ஏற்பட்ட பின்னர்தான் இந்திய மக்களின் குறைகளை அரசிடம் அமைப்பு ரீதியாகவும், தீர்மானங்கள் மூலமாகவும் மனுக்கள் மூலமகாவும் எடுத்துக் கூறினர். எனவே, மக்கள் இயக்கம் என்ற அமைப்பில் இந்திய தேசிய காங்கிரஸ்தான் இந்திய விடுதலைப் போராட்டத்தின் முதல் கட்டம் ஆகும்.

மனு கொடுக்கும் நோக்கத்தோடு ஆரம்பிக்கப்பட்ட இந்திய தேசிய காங்கிரஸ் 1906ஆம் ஆண்டுக்குப் பின்னர் எழுச்சிமிகு இயக்கமாக உருவாகியது. இந்திய தேசீய காங்கிரஸ் தீவிரவாதம், மிதவாதம் என்று இரண்டு பிரிவாகப் பிரிந்து இயக்கத்தை வலுப்பெறச் செய்தனர். பாலகங்காதர திலகர், தீவிரவாதத்தை பின்பற்றிய வ.உ. சிதம்பரம்பிள்ளை, சுப்ரமணியசிவா, வாஞ்சிநாதன், சுப்பிரமணிய பாரதியார் போன்றவர்கள் தேசிய உணர்வினை இந்திய மக்களிடையே

புகுத்தினர். இந்த தீவிரவாதத்தில் ஈடுபட்ட இத்தலைவர்கள் தங்களுக்கென்று எந்தவித எதிர்பார்ப்பையும் முன்வைத்து போராடவில்லை. இந்தியாவின் விடுதலை ஒன்றையே குறிக்கோளாக வைத்துப் போராடினர் எனவே இத்தீவிரவாதிகளின் நடவடிக்கையைத் தடுக்கும் வண்ணம் ஆங்கிலேய அரசு பல வகையான பிரித்தாளும் கொள்கையைக் கடைபிடித்தது. இந்தியர்களை இந்துக்கள், முஸ்லீம்கள் என்று பிரிக்கின்ற வகையில் முஸ்லீம் லீக் கட்சி உருவாக தூண்டியது. அதுபோன்று இந்துக்களிடையே பிராமணர்கள், பிராமணர் அல்லாதவர்கள் என்ற வேறுபாட்டை உருவாக்க நீதிக்கட்சி ஒன்றை உருவாக்க துணை நின்றது. அதேபோன்று இந்தியாவில் வாழுகின்ற பாரம்பரியமிக்க, வீரமிக்க குணம் கொண்ட சில ஜாதியினரை தேசிய நீரோட்டத்தில் ஈடுபட விடாமல் தடுக்கும் நோக்கத்தோடு குற்றப்பரம்பரைச் சட்டம் என்ற ஒரு சட்டம் 1911இல் கொண்டு வரப்பட்டது. இந்த தேசீய இயக்கத்தில் உள்ள தீவிரவாதிகளை அடக்கும் வகையில் கடுமையான சட்டம் இயற்ற வேண்டும் என கருதிய ஆங்கிலேய அரசு நீதிபதி ரௌலட் என்பவரின் தலைமையில் ஒரு குழுவை அமைத்து அறிக்கை பெற்றது. அக்குழு கொடுத்த அறிக்கையின் அடிப்படையில் ரௌலட் மசோதாக்கள் மத்திய சட்டமன்றத்தால் 1919ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் அறிமுகம் செய்யப்பட்டு 1919ஆம் ஆண்டு மார்ச் 17ஆம் தேதி ரௌலட் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

இச்சட்டம் காவல்துறைக்கு அளவற்ற அதிகாரம் கொடுத்திருந்த காரணத்தால் இதனை எதிர்த்து மகாத்மா

காந்தி போன்ற தலைவர்கள் கடை அடைப்பு நடத்த அறிக்கை விட்டனர். மகாத்மா காந்தியின் வேண்டுகோளின்படி பல தலைவர்கள் புரட்சியில் ஈடுபட்டார்கள். எனவே மகாத்மா காந்தி மற்றும் பல தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்ட தலைவர்களை விடுதலை செய்யக்கோரி ஆங்காங்கு பல போராட்டங்கள் வெடித்தன. அவ்வாறு நடைபெற்ற போராட்டங்களில் ஒரு நிகழ்ச்சிதான் ஜாலியன் வாலாபாக் படுகொலை என்பது. இந்நிகழ்ச்சி 1919இல் ஏப்ரல் 13ஆம் தேதி நடைபெற்றது. இந்நிகழ்ச்சியில் ஏராளமானோர் காயம் அடைந்தனர். இந்நிகழ்ச்சியை வன்மையாக கண்டித்து நாடு தழுவிய அளவில் புரட்சி வெடித்தது. ஜாலியன் வாலாபாக் படுகொலைக்குப் பின்னர் அதாவது கிட்டத்தட்ட ஓராண்டுக்குப் பின்னர் நடைபெற்ற நிகழ்ச்சிதான் பெருங்காமநல்லூர் கலவரம் என்பது. (ஏப்ரல் 3, 1920)

## பாகம் - 3

# பெருங்காமநல்லூர் கலவரமும், ஜாலியன் வாலாபாக் படுகொலையும்

1911ஆம் ஆண்டு குற்றப்பரம்பரைச்சட்டம் நிறைவேற்றப்பட்ட பின்னால் பல சாதியினர் மீது இச்சட்டத்தை ஆங்கிலேய அரசு நடைமுறைபடுத்தியது. பிரமலைக் கள்ளரை பொறுத்தமட்டில் முதன்முதலாக கீழக்குடி கள்ளர்கள் மீது அரசு ஆணை எண் 1023 (நீதித்துறை) 4.5.1914இல் இச்சட்டம் அமுல்படுத்தப்பட்டது. இதனை தொடர்ந்து சொரிக்காம்பட்டி, மேலஉரப்பனூர் போன்ற ஏனைய பிரமலைக்கள்ளர் வாழும் கிராமங்களிலும் இச்சட்டம் அமுல்படுத்தப்படும் என்று பரவலாகப் பேசப்பட்டது. பிரமலைக்கள்ளர் வகுப்பைச் சார்ந்தவர்களில் 1910களில், படித்தவர்கள் பெரும்பாலும் இல்லாத காரணத்தால் பிரமலைக்கள்ளர் நிலை குறித்து அரசிடம் முறையாக எடுத்துக் கூற யாரும் இல்லை. இருப்பினும் 6.7.1915-ம் தேதியிட்ட தந்தி ஒன்று சென்னை அரசாங்கத்திற்கு வெள்ளையத்தேவர் என்று கையொப்பமிட்டு உரப்பனூர் கிராமத்தில் இருந்து கொடுக்கப்பட்டிருந்தது. அத்தந்தியில் மதுரை ஜில்லா திருமங்கலம் தாலுகா உரப்பனூர் கள்ளர்கள் ரூபாய் 3,500 கிஸ்தி செலுத்தக்கூடிய பட்டாதாரர்கள்; குற்றப்பரம்பரைச் சட்டத்தை இவர்கள் மேல் அமுல்படுத்துமுன் விசாரணை செய்யவும் என்ற செய்தி அடங்கி இருந்தது.[1] இருந்தபோதிலும் அரசு ஆணை எண்.2233 (நீதித்துறை)

16.9.1915 தேதியிட்டு மற்றொரு ஆணை பிறப்பிக்கப்பட்டு சொரிக்காம்பட்டி, மேலஉரப்பனூர், பூசலப்புரம் ஆகிய ஊர்களில் வாழும் பிரமலைக்கள்ளர்கள் மீது குற்றப்பரம்பரைச் சட்டம் அமுல்படுத்தப்பட்டது. ஆரம்ப காலத்தில் ஒட்டுமொத்த பிரமலைக்கள்ளர் சமுதாயத்தின்மீது இச்சட்டத்தை அமுல்படுத்த வேண்டும் என்ற நடவடிக்கை மேற்கொள்ளப்படவில்லை. ஒருசில கிராமங்களில் மட்டும் இப்படி குற்றப்பரம்பரைச் சட்டத்தை அமுல்படுத்திவிட்டு மற்ற கிராமங்களில் வாழும் மக்கள் மீது அமுல்படுத்தாமல் இருப்பது பல பிரச்சனைகளை உருவாக்கும் என்று கருதிய பிரிட்டிஷ் அரசு, ஒட்டுமொத்த பிரமலைக்கள்ளர்கள் மீதும் இச்சட்டத்தை அமுல்படுத்த வேண்டும் என்று முடிவு செய்தது. இதன்படி மதுரை மாவட்ட ஆட்சியாளர் மற்றும் நீதிபதி (Magistrate) அவர்கள் கொடுத்த தகவலின் அடிப்படையில் ஆணை எண் 1331 ஜுன் 5ஆம் தேதி 1918இல் அனைத்து பிரமலைக்கள்ளர் சமுதாயத்தின் மீதும் குற்றப்பரம்பரை சட்டத்தை அமுல்படுத்த வேண்டும் என்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.[2]

இவ்வாறு உத்தரவு பிறப்பிக்கப்பட்ட பின்னர் பிரமலைக்கள்ளர்கள் மத்தியில் அதிர்ச்சியும், பதட்டமும் ஏற்பட்டது. ஏற்கனவே குற்றப்பரம்பரை சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட கள்ளர்கள் தங்கள் சுதந்திரத்தை இழந்திருக்கின்றனர் என்பது கள்ளர்கள் மனதில் பதிவாயிற்று. இச்சட்டத்தை தங்கள் ஒட்டுமொத்த இனத்தின்கீழ் கொண்டு வராத அளவிற்கு தடைசெய்ய வேண்டும் என்று பல முயற்சிகளை மேற்கொண்டனர்.

ஓரளவு விவரம் தெரிந்தவர்கள் ஒன்று சேர்ந்து தங்களுக்கு தெரிந்த தேசியவாதிகளை அணுகி இச்சட்டத்தை உடைத்து எறிவதற்கான முயற்சிகளை மேற்கொண்டனர்.[3]

பிரமலைக் கள்ளர்கள் போதிய கல்வி அறிவு இல்லாமல் இருந்தாலும், சுதந்திர உணர்வும், வீரமும், விவேகமும் உள்ளவர்கள்தான். இவர்கள் நிலங்கள் வைத்திருக்கிறார்கள். சிறந்த உழைப்பாளிகளும் கூட. இந்நாட்டின் பூர்வீக குடிகள். இப்படிப்பட்டவர்களை நாடோடிகள் எனவும்; திருடர்கள் எனவும்; சித்தரித்து குற்றப்பரம்பரை சட்டத்தின்கீழ் கொண்டு வருவது எந்த வகையிலும் நியாயமற்ற ஒன்றாகும். எனவே தங்கள் உயிரை துச்சமாக மதித்து இவர்கள் ரேகை பதிவு செய்ய மறுத்தனர். அங்குமிங்கும் நாட்டில் நடமாடும் ரேகைப் பதிவு அதிகாரிகளையும், அரசையும் துரும்பாக மதித்து பேசி வந்தனர்.[4] இருப்பினும் இத்தகு இக்கட்டான சூழ்நிலையிலும் எப்படியும் குற்றப்பரம்பரை சட்டத்தை நிறைவேற்றியே தீரவேண்டும் என்று கருதிய அதிகாரிகள், மேல்நடவடிக்கைகளை மேற்கொண்டனர்.

பிரமலைக் கள்ளரின் மனநிலை மற்றும் அவர்களுடைய வாழ்க்கை நிலை, செயல்பாடுகள் ஆகியவற்றை தெரிந்துகொள்ளவும், குற்றப்பரம்பரைச் சட்டத்தை அவர்கள் மீது அமுல்படுத்துவதற்கான வழிமுறைகளையும் ஆராய்ந்து அறிக்கை சமர்பிக்கவும் லவ்லக் என்பவருக்கு 1919ஆம் ஆண்டு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.[5] லவ்லக் என்பவர் 1919ஆம் ஆண்டில்

மதுரை மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளராக இருந்தவர். இவர் ஒரு மனவியல் அறிஞர். இவர் அரசின் பல துறைகளில் பணிபுரிந்து பல அனுபவம் பெற்றவர். குற்ற தொழில் புரிந்தவர்களுக்கு புணர்வாழ்வு அளிக்க பல திட்டங்களை நிறைவேற்றியவர். மக்கள் நல்வாழ்வுக்கு பாடுபடுவதில் மனமகிழ்ச்சி கொள்ளும் ஒரு சீர்திருத்தவாதி. இவர் அரசாங்கத்தின் அடிப்படை நோக்கங்களையும் 1916இல் இருந்து காவல்துறை குற்றப்பிரிவு கையாண்டு வந்த வேலைமுறைகளையும், அடிப்படையாக கொண்டு அறிக்கை ஒன்றை தயாரித்தார். இவ்வறிக்கைக்கு லவ்லக் அறிக்கை என்று பெயர். இவ்வறிக்கையை அடிப்படையாக வைத்துதான் பிரமலைக்கள்ளர் மீது குற்றப்பரம்பரைச்சட்டம் அமுல்படுத்தப்பட்டது. மேலும் இவருடைய அறிக்கையின் அடிப்டையில்தான் பிரமலைக்கள்ளர். சமூக சீர்திருத்த திட்டங்களும் அமுல்படுத்தப்பட்டது.[6] இவ்வறிக்கையின் சில பாகங்களை கவனிப்போம்.

"பிரமலைக்கள்ளர்கள் பெரும்பாலும் வாழும் பகுதி திருமங்கலம் மற்றும் உசிலம்பட்டி தாலுகா மலைப் பிரதேசங்கள். அதாவது கிழக்கே மதுரை நகர் சிக்கந்தர் மலை, வடக்கே நாகமலை, மேற்கே மேற்குத் தொடர்ச்சி மலை. இதற்கு உட்பட்ட பிரதேசம் இங்கிருந்து இராமநாதபுரம், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய பகுதிகளுக்கும், திண்டுக்கல், பழனி, தாலுகாக்களில் உள்ள மலைபிரதேசங்களுக்கும் அவர்கள் குடியேறி இருக்கிறார்கள். இப்பரம்பரை மக்களின் இளம் வாலிபர்கள் பரம்பரை குணத்தாலும், அளவு கடந்த முரட்டுத்தனமான குணத்தாலும்

குற்றங்களை செய்து வருகிறார்கள். இப்பழக்கம் சிறுமலை மற்றும் மதுரை மாவட்டங்களில் உள்ள குன்றுகளுக்கு அருகில் குடியேறி இருக்கும் குடும்பத்தினரிடம் அதிகமாக காணப்படுகிறது. இவர்களுக்கு சொந்தமான நிலங்களின் மூலம் வாழ்வதற்கு போதுமான வருமானம் கிடைக்காததால், இவர்கள் கால்நடைகளை திருடுதல் போன்ற குற்றங்களில் ஈடுபடுகிறார்கள. சில நூற்றாண்டுகளுக்கு முன் ஸ்காட்லாந்தில் உள்ள மலைப்பகுதிகளில் வாழ்ந்த வெள்ளைக்காரர் வகுப்பினரும் இப்படித்தான் வாழ்க்கை நடத்தினர் என்பது குறிப்பிடத்தக்கது. கள்ளர்களின் மத நம்பிக்கையை பார்த்தால், இவர்கள் உலகில் அதிகமாக செல்வம் குவித்து வைத்திருப்பதை பிரித்து இல்லாதவர்களுக்கு விநியோகம் செய்ய படைக்கப்பட்டவர்கள் என்று கருதுகின்றனர். எனவே இவர்கள் கீழ்நாட்டு சோசலிசவாதிகள் போன்று செயல்படுகின்றனர். இவர்கள் ஏகபோக உரிமையோடு சண்டை போடுவதில் தீவிர விருப்பம் கொண்ட சமதர்மவாதிகள் வழியில் செல்கின்றனர் என்று கருதப்படவேண்டியிருக்கிறது. இருப்பினும் கள்ளர்கள் செய்யும் குற்றத்தொழில் தடுக்கப்பட வேண்டும் என்பதை நான் அடிப்படையாக கருதுகிறேன்."[7]

"தற்பொழுது இருந்துவரும் குற்றத்தொழில் தடுப்புமுறையும், இவ்வினத்தவரை பதிவு செய்து கண்காணித்து வருவதையும் சரி என்று நான் கருதுவதற்கில்லை. இதனால் நல்ல பலன் கிடைக்காது. பரவலாக சில கிராமங்களில் 11.11.1920 வரை பதிவாகி

உள்ளவர்கள் எண்ணிக்கை 1872 ஆகும். இவர்களை கண்காணிப்பதற்கு ஏற்படுத்தப்பட்டிருக்கும் அதிகாரிகள், அலுவலர்கள் சரியாக சட்டத்தை நிறைவேற்றப்படாமல் விட்டாலும், கண்காணிப்பு உறுதியோடு இல்லாவிட்டாலும், செய்த வேலைகள் எல்லாம் தோல்வியடைந்து விடும். ஒரே பிரதேசத்தில் பதிவான குற்றவாளிகளும், பதிவாகாத பிறரும் இருக்கும்போது பாகுபாடு செய்து அடக்குவது சிரமம்."[8]

"இந்த சட்டம் சரியாக வேலை செய்யப்பட வேண்டுமானால், திருமங்கலம், உசிலம்பட்டி தாலுகாவில் வாழ்ந்துவரும் பிரமலைக்கள்ளர்கள் மட்டும் அல்லாமல் இவ்வினத்தைச் சேர்ந்த அனைவரையும் (மதுரை மாவட்டம் மற்றும் இராமநாதபுர மாவட்டம்) குற்றத்தொழில் செய்தவர், செய்யாதவர் என்ற பாகுபாடின்றி குற்றப்பரம்பரைச் சட்டத்திகீழ் பதிவு செய்ய வேண்டும். அப்படி செய்கின்ற பட்சத்தில் மொத்தம் 1,70,000 பேர்களுக்கு மேல் பிரமலைக்கள்ளர்களை குற்றபரம்பரைச் 'சட்டத்தின்கீழ் கொண்டு வர நேரிடும்."

"ஆனால் இச்சட்டத்தை அமுல்படுத்தி அடக்குமுறையை மட்டும் கையாண்டால் அது பெரும் ஆபத்தில் முடியும். அடக்குமுறையை கையாளும் அதேவேளையில் பிரமலைக்கள்ளர் சமூகசீர்திருத்த நடவடிக்கையையும் அமல்படுத்த தவறக்கூடாது. இச்சீர்திருத்த திட்டங்கள் இவ்வினத்தின் இளம் சந்ததியர்களின் எதிர்காலம் பிரகாசமாக இருக்கவேண்டும் என்ற அடிப்படையில் அமைய வேண்டும்."[9]

"குற்றப்பரம்பரைச் சட்டம் அமுலில் இருக்கும்போது அடக்குமுறையில் வாழ்ந்து வரும் பெற்றோர்களின் குழந்தைகளுக்கு கட்டாய ஆரம்பகல்வி புகுத்தப்பட வேண்டும். அத்தோடு விட்டுவிடாமல், தகுதி வாய்ந்தவர்களுக்கு உயர்கல்வி படிக்கவும், தேவையான உதவிகள் மற்றும் உபகரணங்கள் கிடைக்கவும் வழிவகை செய்யவேண்டும்."

"பதிவு செய்யப்பட்டவர்கள் சட்டத்தின்பிடியில் இருந்து தப்பாமல் இருக்க காவல் துறையினரின் கடுமையான கண்காணிப்பும், காவல்படையின் அளவும், திறமையும் அதிகரிக்கப்பட்டு தீவிர மேற்பார்வை மேற்கொள்ளப்பட வேண்டும். குற்றப்புரம்பரைச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்டவர்களின் வாழ்விற்கு தொழில் தொடங்கி வேலை வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும். தொழிலும் வருமானமும் இல்லாதபோதுதான் மனிதனுக்கு திருடவேண்டும் என்ற எண்ணம் உண்டாகும். பயிற்சி பெற்றவர்களைக் கொண்டு அவர்களுக்கு கைத்தொழில் கற்றுக்கொடுக்க வேண்டும். தக்க வருமானம் கிடைக்கும்படியாக அவர்கள் கற்கும் தொழில் இருக்க வேண்டும். இவர்களில், பெரும்பான்மையினர் விவசாயிகளாக இருப்பதால் விவசாயம் செய்வதற்கு நிலம் கொடுத்து உதவ வேண்டும். கூட்டுறவு துறையில் இவர்கள் வாழ்க்கை துறைமையம் கொண்டு அமையவேண்டும். இவர்கள் தொழிலில் சிறந்து வளர்ந்து வரும்போதே, நல்லறிவு போதிக்க வேண்டும்."[10]

"மேல்படிப்புக்கு சென்றவர்கள் தவிர மற்றவர்களுக்கு தொழிற்கல்வி பயில வகை செய்ய வேண்டும். உயர்கல்வி முடித்தோருக்கு வேலைவாய்ப்பு அளிக்க வேண்டும். கற்றறிந்தவர்கள் தொழிற்கல்வி பெறாமலோ, வேலை பெறாமலோ இருந்தவர்களானால், அவர்கள் தங்கள் குடும்பங்களில் சென்று விவசாயம் செய்வார்களென்று எதிர்பார்க்க முடியாது. இவர்களைப் பொறுத்தமட்டில் அரசு மிக கவனமாக இருக்க வேண்டும். நவீன அறிவு படைத்த இக்கூட்டம், தங்கள் மூதாதையர்கள்போல் தவறான வழியிலோ, அரசியலிலோ இறங்கிவிட்டார்களானால் அது பேராபத்தாய் முடியும். அரசுக்கு இத்தகைய பணியில் அதிக சிரமம் ஏற்பட்டாலும், குற்றப்பரம்பரைச் சட்டத்தால் பாதிப்படையும் சமூகத்தின் சந்ததியினருக்கு நல்வாழ்வு கிட்டும். எனவே, ஒரு சமூகத்தில் கிடைக்க இருக்கும் நல்ல குடிமக்களின் நலனைக் கருதி என் திட்டம் அங்கீகரிக்கப்படவேண்டும் என்று தன் அறிக்கையில் லவ்லக் கூறியுள்ளார். இவருடைய அறிக்கை 24.2.1920இல் அங்கீகாரம் செய்யப்பட்டு, பிரமலைக்கள்ளர் சமூக சீர்திருத்தத்திட்டம் செயலுக்கு வந்தது."[11]

இந்த அறிக்கையை நாம் நன்றாக ஆராய்ந்தோமேயானால் பிரமலைக்கள்ளர் வகுப்பனைச் சேர்ந்தவர்கள் திருத்தமுடியாத பெரிய குற்றங்களைச் செய்தவர்கள் என்று கூறமுடியாது. சிறுசிறு குற்றங்கள்தான் செய்திருக்கிறார்கள் என்பதை லவ்லக் ஒப்புக் கொள்கின்றார். பிரமலைக்கள்ளர்களுடைய செயல்பாடு சோசலிஸ்டுகளின் செயல்பாடுபோல இருப்பதாக அவர் கூறுகின்றார்.

பிரமலைக்கள்ளர்கள் அனைவரும் குற்றவாளிகள் அல்ல என்பதையும் அவர் ஒப்புக் கொள்கின்றார். அவர்களில் ஒருசிலர் குற்றவாளிகள் என்றும், பலர் குற்றமற்றவர்கள் என்றும் பாகுபாடு செய்து அடக்குவது சிரமம் என்று கூறுகின்றார். அடக்குமுறையே புரட்சியின் மூலகாரணம் என்ற சொல் வழக்கின் ஒரு தன்மையை மனவியல் அறிஞரான லவ்லக் உணர்ந்திருந்த காரணத்தால் சட்டத்தைப் பயன்படுத்தி அடக்குமுறையை மட்டும் கையாண்டால் அது ஆபத்தில் போய் முடியுமென்று அரசுக்கு எச்சரிக்கை விடுகின்றார். எனவே, அடக்குமுறைச் சட்டம் கையாளப்படும் அதேவேளையில், பிரமலைக்கள்ளர் சமூகசீர்திருத்த நடவடிக்கைகளையும் அமுல்படுத்த தவறக் கூடாது என்று ஆலோசனை வழங்குகின்றார். சீர்திருத்த திட்டங்களில் பல ஆக்கபூர்வமான ஆலோசனைகள் வழங்கி உள்ளார். இன்றைய சமுதாயத்தில் படித்த இளைஞர்கள் பலர், வேலையில்லாமல் இருக்கின்ற காரணத்தால் ஜாதிக்கலவரம் ஏற்படுகிறது என்பது ஒரு காரணமாக கருதப்படுகிறது. இதனை உணர்ந்த லவ்லக் சமூக சீர்திருத்த திட்டத்தின் அடிப்படையில் கல்விபெற்ற பிரமலைக்கள்ளர் இளைஞர்களுக்கு வேலைவாய்ப்பு கொடுக்காதபட்சத்தில் அவர்கள் தங்கள் மூதாதையர்கள் போல தப்பான வழியிலோ அல்லது அரசியலிலோ இறங்கிவிடுவார்கள் என்று எச்சரிக்கின்றார். அவ்வாறு அரசியலில் இறங்கும் பட்சத்தில் அது பேராபத்தில் போய் முடியுமென்று எச்சரிக்கின்றார். இக்கருத்துக்களிலிருந்து நாம் அறிவது என்னவென்றால், இந்திய தேசிய காங்கிரஸ் பலம் பெற்று,

தீவிர நடவடிக்கைகளில் இறங்கிக்கொண்டிருக்கின்ற இந்த வேளையில், பிரமலைக்கள்ளர் இளைஞர்கள் இந்திய தேசிய காங்கிரசில் சேர்ந்துவிட்டால் அது பேராபத்தை விளைவிக்கும் என்று எச்சரிக்கின்றார். இதன்மூலம் பிரமலைக்கள்ளர்களை ஏனைய தேசீய நீரோட்டத்திலிருந்து பிரித்திடவே குற்றப்பரம்பரைச்சட்டம் பிரமலைக்கள்ளர்கள் மீது புகுத்தப்பட்டது என்பது தெள்ளத் தெளிவாகிறது. எனவே, குற்றப்பரம்பரைச் சட்டம், பிரமலைக்கள்ளர்கள் மீது புகுத்தப்பட்டது அரசியல் உள்நோக்கத்திற்காகத்தான் என்பதை நாம் உணரமுடிகிறது.

1918ஆம் ஆண்டு அனைத்து பிரமலைக்கள்ளர்கள் மீதும் குற்றப்பரம்பரைச் சட்டத்தை அமுல்படுத்துவது என்று உத்தரவு பிறப்பிக்கப்பட்ட பின்னர் அச்சட்டத்தை செயல்படுத்த தனி அலுவலகம் ஒன்று உருவாக்கப்பட்டது. அதன்படி ஒரு முதல் வகுப்பு நீதிபதி (Magistrate), தனி காவல்துறை ஆய்வாளர், தனி காவல்துறை துணை ஆய்வாளர்கள், ஏட்டுகள், காவலர்கள் என்று பல அதிகாரிகள் நியமிக்கப்பட்டார்கள். இவர்களோடு மதுரை மாவட்டத்தில் உள்ள முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு அதிகாரங்களையுடைய நீதிபதிகள் (Magistrates), துணை நீதிபதிகள் (Sub-Magistrates), மற்றும் ஏனைய காவல் நிலையங்களில் உள்ள காவல் அதிகாரிகள் அனைவரும் குற்றப்பரம்பரைச் சட்டத்தின் நிர்வாகப் பொறுப்பை சிறப்பு பொறுப்பாக நினைத்து அமுல்படுத்த வேண்டும் என்றும் தனியாக நியமனம் செய்யப்பட்ட அலுவலகத்தோடு, ஒத்துழைக்கவேண்டும் என்றும் உத்தரவு

பிறப்பிக்கப்பட்டது.[12] இவ்வாறு அலுவலகங்கள் துவக்கப்பட்டு குற்றப்பரம்பரை சட்டத்தின்கீழ் பிரமலைக்கள்ளர்களை பதிவு செய்யும் இக்காலகட்டத்தில் சமூக பொருளாதார சூழ்நிலை என்ன என்று பார்த்தால் அது முதல் உலகப்போர் முடிந்த காலமாக இருந்தது. அதனால் பொருளாதாரத்தில் நாடு நலிவுற்ற நிலையில் இருந்தது. பஞ்சங்கள் பல ஏற்பட்டு மக்கள் பலவகையில் வாடி வாழ்ந்து வந்த காலம். இச்சூழ்நிலையில்தான் கள்ளர்நாட்டில் 'பண்டு கலவரம்'[13] ஏற்பட்டு ஜாதிச்சண்டையில் கள்ளர் நாடு நிலைகுலைந்து இருந்தது. பண்டு கலவரம் என்பது திண்டுக்கல் பகுதியில் வாழ்ந்த கள்ளர்களின் காவல்முறையை எதிர்க்க வேண்டும் என்று அம்மையப்ப கோனார் என்பவர் ஆங்கிலேயருடைய மறைமுக ஆதரவுடன்[14] பிரமலைக்கள்ளர்களோடு சண்டையிட்டார். இதற்கு வேறு பல காரணத்தையும் கூறுவர். அம்மையப்ப கோனார் வசதிபடைத்த ஒருவர். இவர் பிரமலைக்கள்ளர் காவல் முறையை எதிர்த்ததோடு மட்டுமில்லாமல், பிரமலைக்கள்ளர்களுக்கு கொடுக்க வேண்டிய காவல் கூலியையும் கொடுக்க மறுத்ததோடு மற்ற இனத்தவர்களையும் சேர்த்துக் கொண்டு காவல் கூலியை கொடுக்கவிடாமல் தடுத்தார். எனவே பிரமலைக்கள்ளர்கள் ஒருபுறமும், அம்மையப்ப கோனார் தலைமையில் வேறு சில சிறுபான்மையினர் மறுபுறமும் கலவரத்தில் ஈடுபட்டனர். இக்கலவரம் மற்றும் வழக்கு சம்பந்தமான செலவுகளுக்கு இரு அணியினரும நிதி திரட்டினர். பிரமலைக்கள்ளர்கள் சார்பில் கூடலூர் பேயத்தேவர் தலைமையில் நிதி

திரட்டினார்கள். எனவே, இக்கலவரம் பண்டு கலவரம் என்று அழைக்கப்பெற்றது.

இந்த சூழ்நிலையில் இச்சட்டம் புகுத்தப்பட்டபோது, பிரமலைக்கள்ளர்கள் மத்தியில் ஒரு ஒன்றுபட்ட உணர்வு ஏற்பட வாய்ப்பு இருந்தது. அது மட்டுமல்லாமல் இச்சட்டத்தின் கொடிய விளைவுகளை ஓரளவு கல்வியறிவு பெற்றிருந்த சில கிராம அதிகாரிகள் நன்கு உணர்ந்திருந்தனர். அவர்களில் சிலர் உசிலம்பட்டி கஸ்பா நாட்டாண்மை, கல்லூத்து நாட்டாண்மை, பன்னியான் நாட்டாண்மை, கருமாத்தூர் வடக்கம்பட்டி நாட்டாண்மை, காளப்பன்பட்டி நாட்டாண்மை, விக்கிரமங்கலம் நாட்டாண்மை, பொட்டுலுப்பட்டி பெரிய வீட்டு விருமாண்டி தேவர், உரப்பனூர் வெள்ளையத் தேவர், சாத்தன்குடி சூசை ஆசிரியர் ஆகியவர்களாகும்.[15]

இவர்களுடைய முயற்சியின் காரணமாக ஆங்காங்கே சில கிராமங்களில் நாட்டு கூட்டங்கள் கூட்டப்பட்டு கைரேகைச்சட்டத்தை எதிர்ப்பதென்று முடிவு செய்யப்பட்டது. மதுரையில் உள்ள காங்கிரஸ் தலைவர்களை சந்தித்து காங்கிரசின் ஆதரவு பிரமலைக்கள்ளர்களுக்கு கிடைக்கும்படி செய்ய தூதுவர்கள் பலர் அனுப்பப்பட்டார்கள். இச்சூழ்நிலையில்தான், லவ்லக் அறிக்கை அங்கீகரிக்கப்பட்ட பின்னால், பிரமலைக் கள்ளர்களை குற்றப்பரம்பரைச் சட்டப்படி பதிவு செய்ய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. முதன்முதலில் திருமங்கலம் தாலூகாகளில் காளப்பன்பட்டி, போத்தம்பட்டி,

பெருங்காமநல்லூர், தும்மக்குண்டு, குமரன்பட்டி ஆகிய ஊர்களில் குற்றப்பரம்பரைச்சட்டத்தை அமல்படுத்துவது என்று முடிவு செய்யப்பட்டது.[16]

இத்தகைய முடிவு அப்பகுதி மக்களுக்கும் தெரியும். காவல்துறையினர் 1920ஆம் வருடம் மார்ச் மாதம் 2ஆம் தேதி குற்றப்பரம்பரைச்சட்டத்தை அமல்படுத்தும நோக்கத்தோடு சிந்துப்பட்டியில் முகாமிட்டு இருந்தனர். இதை அறிந்த மேலே குறிப்பிட்ட கிராமத்து பெரியதனக்காரார்கள் ஒன்றாக சேர்ந்து சிந்துபட்டிக்கு சென்று காவல்துறையினரிடம் இச்சட்டத்தை அமல்படுத்துவது அநியாயம் என்று முறையிட்டனர். அதுமட்டுமில்லாமல் கள்ளர்கள் சிறந்த விவசாய வர்க்கத்தினர், சட்டத்தில் கூறியது போன்று காட்டுமிரண்டி அல்ல என்று கூறினர். மேலும் அவர்கள் மதுரை சென்று மாவட்ட ஆட்சித்தலைவரை கண்டு இச்சட்டத்தை தடைசெய்ய நடவடிக்கை எடுக்கப் போகிறோம் என்றும் கூறினர். இவர்கள் கூறிய கருத்துகளை எழுத்து மூலமாக அதிகாரிகள் எழுதி வாங்கிக் கொண்டு நடவடிக்கையை ஒத்திப்போட்டனர் இந்த பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டவர்கள்,

1. தேவசகாய தேவர்
2. காளப்பன்பட்டி கிராமஅதிகாரி பட்டியான் கருப்பத்தேவர்
3. பொட்டுலுப்பட்டி பெரியவீட்டு விருமாண்டித்தேவர்
4. பெருங்காமநல்லூர் உடையார் தேவர்
5. சிந்துபட்டி முத்து இருளாண்டி தேவர்

ஆகியோர்களாவர். இவர்கள் மதுரை சென்று மாவட்ட ஆட்சி தலைவருக்கு மனு ஒன்றைக் கொடுத்தனர்.[17]

இதனைத் தொடர்ந்து 24.3.1920ல் தும்மக்குண்டு சந்தை மைதானத்தில் கள்ளப்பட்டி, கட்டத்தேவன்பட்டி உள்ளிட்ட பக்கத்து ஊர்களில் உள்ள கள்ளர்கள் ஒன்றுகூடி பொதுக்கூட்டம் ஒன்றை நடத்தினர். அக்கூட்டத்தில் கள்ளர்கள்மேல் சுமத்தப்பட்டு இருக்கும் ரேகைச்சட்டத்தைப் பற்றியும் அதன் அநியாயத்தைப் பற்றியும் விவாதம் செய்யப்பட்டது. அத்தோடு மேல்நடவடிக்கை எடுப்பதற்கென்று குழு ஒன்று அமைக்கப்பட வேண்டும் என்றும் கள்ளர் நாட்டில் உள்ள அனைத்து பெரிய வீட்டுக்காரர்களும் இப்போராட்டத்தில் கலந்து கொள்ள வேண்டும் எனறு வேண்டிக் கொள்வது என்றும் தீர்மானிக்கப்பட்டது. அதன்படி குற்றப்பரம்பரை எதிர்ப்பு குழு ஒன்று அமைக்கப்பட்டது. அக்குழுவில் உள்ள உறுப்பினர்கள் விவரம் வருமாறு.

1) தேவசகாயத்தேவர்
2) ஆசிரியர் மரிய சூசைத்தேவர், சாத்தங்குடி
3) பெரிய வீட்டு விருமாண்டிதேவர்
4) பட்டியான் கருப்பத்தேவர், காளப்பன்பட்டி
5) உடையான் பூசாரித்தேவர், காளப்பன்பட்டி
6) முத்துமாயத்தேவர்
7) உடையார்தேவர், பெருங்காமநல்லூர்
8) முத்துகருப்பத்தேவர், காளப்பன்பட்டி

இக்குழுவைச் சார்ந்தவர்கள் கள்ளர் நாட்டைச் சார்ந்த பிற முக்கிய பெரியவீட்டுகாரர்களை சந்தித்து அவர்களையும் இணைத்து பொதுகூட்டங்கள் பல இடங்களில் கூட்டி, சட்ட எதிர்ப்பு நடவடிக்கைகளில் இறங்கினார்கள்.[18]

இதே வேளையில் காவல் துறையினர் இப்பகுதியில் வாழ்ந்த கள்ளர் அல்லாத பிற இனத்தவர்களை கள்ளர்களுக்கு எதிராக புகார் கொடுக்கும்படி தூண்டினார்கள். அதன்படி 28.3.1920இல் சிந்துபட்டி காவல்துறை ஆய்வாளர் பெருங்காமநல்லூருக்கு ஒரு காவல்படையுடன் வந்து அங்கு வாழும் நாயக்கர் சமூகத்தை சார்ந்தவர்களை அழைத்து கள்ளர்களுக்கு காவல் கூலி கொடுக்கின்றீர்களா? அவ்வாறு கொடுப்பதானால் காவல் கூலி கொடுக்கின்றோம் என்று புகார் ஒன்றினை கொடுங்கள். கள்ளர்கள் மீது வழக்கு தொடுத்து தண்டிக்கிறோம் என்று கேட்டார்கள. ஆனால் நாயக்கர் சமூகத்தினர் காவல்துறையினர் எதிர்பார்த்தப்படி புகார் கொடுக்கவில்லை. இப்பகுதியில் வாழ்ந்த மக்களில், கள்ளர்கள் அல்லாத பிற இனத்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் நாயக்கர்கள், ரெட்டியார்கள் மற்றும் பிள்ளை இனத்தவர்கள். இவர்கள் கள்ளர்களோடு சுமுகமான உறவோடு சகோதரர்களாக வாழ்ந்து வந்தனர். இவர்கள் கள்ளர்களின் பாரம்பரிய காவல்முறையை தாங்கள் ஏற்று கள்ளர்களுக்கு உரிய மரியாதையையும் செலுத்தினர். காவல்முறையில் ஈடுபட்டு இருந்த கள்ளர்கள் பலர் நிலச்சுவான்தாரர்களாகவும், வசதி படைத்தவர்களாகவும் இருந்தனர். இவர்கள் தாங்கள்

செய்யும் காவல்முறையில் பிற இனத்தவர்களின் நம்பிக்கைக்கு பாத்திரமானவர்களாக இருந்தனர். பண்டைகால காவல் முறையில் ஏதேனும் பொருள் திருடுபோய்விட்டால் காவல்காரர்கள் அத்திருட்டுப் பொருளை மீட்டித்தர வேண்டும் அல்லது அப்பொருளுக்கு இணையாக காவலர்கள் நஷ்டத்தொகை வழங்கவேண்டும் என்று இருந்தது. கள்ளர் காவல் முறையில் இருந்தவர்கள் தங்கள் காவல் பகுதிக்கு உட்பட்ட பகுதியில் ஏதேனும் திருடு போய் அதை கண்டுபிடிக்க முடியவில்லை என்றால் அது தங்களுக்கு ஏற்பட்ட அவமானம் என்று கருதினர். எனவே, பொதுவாக கள்ளர்கள் காவலுக்கு உட்பட்ட பகுதியில் திருடு போவது இல்லை. அவ்வாறு திருடு போனாலும் திருடியவரை கண்டுபிடித்து திருட்டுப் பொருளை உரியவரிடம் ஒப்படைத்துவிடுவர். அப்படி முடியாத பட்சத்தில் திருடுபோன பொருளுக்குரிய நஷ்டத்தொகையை பணமாகவோ, பொருளாகவோ காவல்காரர்கள் கொடுத்துவிடுவர். எனவே இப்பகுதியில் வாழ்ந்த நாயக்கர்கள், ரெட்டியார்கள் மற்றும் பிள்ளை ஆகியோர் கள்ளர்களின் காவல் முறையில் மிகுந்த நம்பிக்கையும் மரியாதையும் வைத்திருந்தார்கள்.

ஆனால் அரசாங்கத்தின் மூலம் நிறுவப்பட்ட காவல் துறையில் அன்றும் சரி, இன்றும் சரி, திருடுபோன பொருளை காவல்துறையினர் மூலம் மீட்க வேண்டுமானால், திருடு கொடுத்தவர் அதற்கு இணையான பணத்தை செலவு செய்ய வேண்டிய நிலை உள்ளது. அவ்வாறு திருட்டுப் பொருளை மீட்க முடியாவிட்டால் காவல்துறையினர்

அப்பொருள்களுக்கு பழைய காவல்முறையில் இருந்ததைப் போன்று நஷ்டஈடு வழங்குவது இல்லை. எனவே இன்றைய காவல்துறையினருக்கு பொறுப்புகள் நிர்ணயம் செய்யப் படுவதில்லை. ஆனால் செர்ஷா ஆட்சிக்காலத்தின் போது காவல் நிலையத்தின் எல்கைக்குட்பட்ட பகுதிகளில் கொலையோ அல்லது கொள்ளை போன்ற பெரும் குற்றங்களோ நடைபெற்றது என்றால் அக்காவல் நிலையத்தின் அதிகாரி அக்குற்றவாளிகளை கண்டுபிடித்தாக வேண்டும். அக்குற்றவாளிகளை காவல்நிலைய அதிகாரி கண்டுபிடிக்க முடியவில்லையென்றால் அக்குற்றத்திற்கான தண்டனை அக்காவல் நிலைய அதிகாரிக்கு அளிக்கப்படும் என்ற கடுமையான சட்டம் நிலவி வந்தது. ஆனால் இன்றைய சூழ்நிலையில் காவல்துறையினர் மீது மக்களுக்கு நம்பிக்கை இல்லை. எனவே பழைய காவல்முறையை அதாவது கள்ளர் காவல்முறையே சிறந்தது என்று கருதும் நிலை ஏற்பட்டுள்ளது. இதன் தொடக்கமே நகர்புறங்களில் பல இடங்களில் செக்யூரிட்டி சர்வீஸஸ் (Security Services) என்ற அமைப்புகள் ஏற்பட்டுள்ளன.

எனவே கள்ளர் காவல்முறையில் நாயக்கர் சமூகத்தினர் போன்றவர்களை காவல்துறையினர் கட்டாயப்படுத்தி புகார் மனு கேட்டபோது அவர்கள் மறுத்துவிட்டனர். இதனால், காவல் துறையினர் இந்த குற்றப்பரம்பரைச் சட்டத்தினை கள்ளர்கள் மீது அமல்படுத்துவதற்கு தயாரானார்கள். இந்த வேளையில் கள்ளநாட்டு பெரியவீட்டு பணக்காரார்கள் எல்லோரும் குற்றப்பரம்பரைச் சட்ட எதிர்ப்புக்குழு எடுக்கும்

நடவடிக்கைக்கு ஆதரவு அளிக்க ஒப்புக்கொண்டனர். சட்ட எதிர்ப்புக்குழு, தங்களுக்கு வழிகாட்டியான காங்கிரஸ் பிரமுகரும் மதுரை நகர் வழக்குரைஞருமான ஜார்ஜ் ஜோசப் என்பவரை வழக்கறிஞராக வைத்துக் கொண்டது. அவர் கள்ளர்களின் போராட்டத்திற்கு காங்கிரசின் துணையையும் பெற்றுக் கொடுத்தார். கள்ளர்நாடு முழுவதும் பல பொதுக் கூட்டங்கள் போட்டு ஆங்கிலேய அரசின் குற்றப்பரம்பரை சட்டத்தை அநியாயமாக கள்ளர்கள் மீது அமல்படுத்துவதை கண்டனம் செய்தார். ரேகைப்பதிவை ஏற்றுக் கொள்ளக் கூடாது என்று அனைவரும் அறிவுறுத்தப்பட்டனர். இப்படிப்பட்ட சூழ்நிலையில்தான் பெருங்காமநல்லூர் கிராமத்தில் குற்றபரம்பரைச் சட்டத்தை அமல்படுத்த அரசு முயற்சிகள் மேற்கொண்டது.

## பெருங்காமநல்லூர் போர்

1920ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 3ஆம் தேதியன்று பெருங்காமநல்லூரில் வாழுகின்ற வயது வந்த பிரமலைக்கள்ளர்கள் அனைவரும் அவ்வூர் மந்தையில் கூடியிருக்க வேண்டும். அன்று ஊரை விட்டு யாரும் வெளியில் போகக் கூடாது. குற்றப்பரம்பரைச் சட்ட அதிகாரிகள் அங்கு வந்து உங்களை பதிவு செய்வார்களை. இதனை மீறினால் தண்டனைக்குள்ளாவீர்கள் என்று பெருங்காமநல்லூர் கிராம கள்ளர்கள் எல்லோருக்கும் சம்மன் அனுப்பப்பட்டது. இதை கண்ணுற்ற பெருங்காமநல்லூர் மக்கள் ரேகைப் பதிவு சட்டத்தை ஏற்கக்கூடாது. அதன்படி

நாம் பதிவு செய்ய மறுக்க வேண்டும், நாம் இதனை இப்பொழுது ஏற்றுக்கொண்டால், நம் இனத்தையே இச்சட்டத்தின் கீழ் பதிவு செய்துவிடுவர். அதற்கு நாம் முன்மாதிரியாக இருக்ககூடாது என்று முடிவு செய்தனர். அவ்வாறு சட்டத்தை மீறும்போது குற்றப்பரம்பரைச் சட்ட அதிகாரிகள் அடக்குமுறையை கையாண்டாலும், கைது செய்தாலும் அவர்களை தாக்குவது என்று முடிவு செய்தனர். இந்த நிலையில் கள்ளர் சமூக கிராம அதிகாரிகள் மூலமாக பெருங்காமநல்லூருக்கு ஆயுதக்காவல்படை ஒன்று ஏப்ரல் 3ஆம் தேதி வரப்போகிறது என்று அவர்களுக்கு துப்புகிடைத்தது. எனவே கள்ளர்கள் பல முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளில் இறங்கினர்.

அதன்படி அதிகாரிகள் வந்தவுடன், கள்ளர்கள் எல்லோரும் மந்தையில் வந்து கூடவேண்டும்; மந்தைக்கு வருவதற்குமுன் தங்கள் வீட்டில் தங்களுக்கு ஏற்றபடியான ஆயுதங்களை தாக்குவதற்கு தயார் நிலையில் வைத்துவர வேண்டும்; வீட்டில் உள்ள ஆடு,மாடுகள் மற்றும் பெண்கள், குழந்தைகள் ஆகியோர்களை பாதுகாப்பாக வைத்துவிடவேண்டும்; முடிந்தால் வெளியூர்களுக்கு அனுப்பிவிடலாம்; கலவரம் ஏற்பட்டால் ஒரு நிமிட நேரத்தில் ஆயுதம் கொண்டு தாக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு இந்த ஏற்பாடுகளை செய்திருந்தனர்.[19]

காவல்துறையின் படை பலமும், தாக்குதலும் அதிகமாக இருக்கும் என்று கருதப்பட்டால் பக்கத்து ஊர்களில் உள்ள கள்ளர்களின் உதவியை நாடுவது என்று

முடிவு செய்யப்பட்டது. அதன்படி காளப்பன்பட்டி, குமரன்பட்டி, போத்தம்பட்டி ஆகிய ஊர்களில் உள்ள கள்ளர்களோடு கலந்து பேசி ஒரு முடிவிற்கு வந்தனர்.

அதன்படி மேலே குறிப்பிட்ட பக்கத்து ஊர் கள்ளர்கள் அனைவரும் 3.4.1920இல் பெருங்காமநல்லூரில் என்ன நடக்கிறது என்பதை கவனித்துக் கொண்டு இருக்க வேண்டும். அவர்கள் எல்லோரும் எந்த நேரத்திலும் தாக்குதல் நடத்த ஆயுதங்களோடு ஆயத்தமாக இருக்கவேண்டும். பெருங்காமநல்லூர் மக்களுக்கு ஆபத்து ஏற்படும் நிலை உருவாகும்போது பெருங்காமநல்லூர் கள்ளர்கள் பெரிய படாங்குவேட்டு ஒன்று போடுவர். வேட்டு சத்தம் கேட்டவுடன் பக்கத்து ஊர் கள்ளர்கள் அனைவரும் ஆயுதங்களோடு பெருங்காமநல்லூர் கள்ளர்களுக்கு உதவ ஓடிவர வேண்டும் என்பதாகும்.[20]

இந்த சூழ்நிலையில் அரசாங்கத்தின் முடிவான திட்டத்தை 2.3.1920 அன்று இரவே பெருங்காமநல்லூர் கள்ளர்கள் தெரிந்துகொண்டார்கள். அதன்படி திருமங்கலத்தில் இருந்து காவல்படைகள் ஆயுதங்களுடன் வருவதாகவும், அப்படை பெருங்காமநல்லூர் கள்ளர்களை கட்டிவைத்து ரேகை பதிவு செய்யப்போவதாகவும், தெரிந்து கொண்டனர். திருமங்கலத்தில் இருந்து நடைபயணமாக வரும் அக்காவல்படை நள்ளிரவில் தும்மக்குண்டில் வந்து தங்கி சூரியன் உதயம் ஆவதற்கு முன்பு பெருங்காமநல்லூர் வந்து, கள்ளர்களை வளைத்துக் கொள்ளும் என்றும் கேள்விப்பட்டனர். அதே போன்று

உசிலம்பட்டியில் இருந்து துணை மாவட்ட ஆட்சியாளரும், நீதிபதியும் (Magistrate), கன்னியம்பட்டி வழியாக விடியும் முன்பு பெருங்காமநல்லூர் வந்து, காவல்படையுடன் சேர்ந்து கொள்வர் என்றும் தெரிந்து கொண்டனர். இவ்வாறு தெரிந்த பின்னர் பெருங்காமநல்லூர் இளைஞர்கள் மிக கோபம் கொண்டு இருந்தனர். விட்டி பெருமாள்தேவர் என்பவர் சிலம்புக் கலைஞர். அவ்வூரில் உள்ள பல இளைஞர்களும் சிலம்புக் கலையில் தேர்ச்சி பெற்று இருந்தார்கள். இவ்விளைஞர்களை ஒன்று திரட்டி அவர்களை காவல்படையோடு போர் செய்ய தயார்நிலை செய்தார். அத்தோடு காவல்படையினர் அவர்களை தாக்கினால், தாக்கும் காவல்படையினரை எதிர்தாக்குதல் செய்து அக்காவல் படையினரை காத்தாண்டம்மனுக்கு (கோயில்) பலிகொடுத்து விடவேண்டும் என்றும் அவர் சபதம் போட்டார்.[21]

திட்டமிட்டபடி 2.4.1920 அன்று இரவோடு இரவாக பிரயாணம் செய்து காலை 4.30 மணி அளவில் காவல்படை பெருங்காமநல்லூரை அடைந்தது. ஊரைச் சுற்றி நின்று கொண்டு யாரும் ஊரைவிட்டு வெளியேறாத வண்ணம் காவல் மேற்கொண்டது. உசிலம்பட்டியில் இருந்து விடிந்த பின் வந்த வருவாய்த்துறை அதிகாரிகள் மந்தையில் அமர்ந்தனர். காலை மணி 6க்கு தண்டல்காரன் மூலம் அனைத்து மக்களும் மந்தைக்கு வரும்படி தெரிவிக்கப்பட்டனர். மேலும், வயதுவந்த ஆண்கள் யாவரும் ஊர் மந்தையில் அதிகாரிகளிடம் ரேகைப்பதிவு செய்து கொள்ள வேண்டுமென்றும், அதுவரை யாரும்





ஊரைவிட்டு வெளியே போகக் கூடாது என்றும், தவறினால் அவர்கள் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப் படுவார்கள் என்றும் பறைசாற்றப்பட்டது. இதைக்கேட்ட மக்கள் பரபரப்புடன் மந்தைக்கு ஓடி வந்து கூக்குரலிட்டனர். என்ன நடக்குமோ என்று பயங்கரத் தோற்றம் காணப்பட்டது. கூட்டத்திலிருந்த பெரியவர்கள் மக்களை அமைதியாக இருக்கும்படி வேண்டிக் கொண்டனர். அதன்பின்னர் முக்கிய பெரிய மனிதர்களும், அதிகாரிகளும் நேருக்கு நேர் நின்று அமைதியாக பேசத் தொடங்கினர். அரசு தரப்பிலிருந்து அதிகாரி ஒருவர் குற்றப்பரம்பரைச் சட்டத்தின் விவரத்தை விளக்கினார். மேலும் அச்சட்டத்தை நிறைவேற்ற தவறமாட்டோம், எனவே அனைவரும் அரசின் உத்தரவுக்கு கீழ்படிந்து பதிவு செய்து கொள்ளவேண்டும் என்றும் எச்சரித்தார். இதற்கு கூட்டத்தில் இருந்த பெரியதனக்காரர்களில் ஒருவர் பதிலளித்தார்; அது கட்டபொம்மன், ஜாக்சன் துரைக்கு பதிலளித்ததைப்போன்று அமைந்துள்ளது. அது பற்றிய செய்தியை திரு. முத்துத்தேவர் அவர்கள் தம்முடைய மூவேந்தர்குல தேவர் சமூக வரலாறு என்னும் புத்தகத்தில் கூறியுள்ள அதே வாசகத்தை இங்கு சமர்ப்பிக்கிறோம்.

"சர்க்கார் சட்டத்திற்குப் பணிய வேண்டியது குடிகள் கடமை, காட்டுமிராண்டி சர்க்கார் கண்மூடித்தனமானப் பிரயோகிக்கும் மூளையில்லாத அடக்குமுறைச் சட்டத்தை எதிர்க்க வேண்டியதும் குடிகளின் உரிமையோடு கூடிய கடமை என்று குடிகளின் சார்பில் பேசிய தலைவர் பதில் உரைத்தார். மேலும் அதிகாரிகளையும் கண்டித்துப்

பேசினார். அடக்குமுறையில் சட்டம் பிறப்பித்து எங்கள் வகுப்பாரை அடிமைப்படுத்தப் பார்க்கிறது அரசு, நீங்களும் உங்கள் ஏகாதிபத்திய வெறிபிடித்த வெள்ளையர் அரசும், அழியுங்காலம் தூரத்தில் இல்லை என்றும் பெருமிதமாக பேசினார். நாங்கள் நிரபராதிகள், பட்டாதாரர்கள், களவுத்தொழில் செய்யாதவர்கள், இந்தப் பிராந்தியத்தில் வாழும் சகோதர சமூகத்தினர்களுக்குப் பாதுகாவலர்கள், தோழர்கள் உங்கள் அரசு பிறப்பித்திருக்கும் சட்டம் கண்மூடித்தனமானதாகும். எங்கள் நாட்டின்பால் பற்றுதல் கொண்ட தேசிய உணர்ச்சியை ஒடுக்குவதற்கு முற்படுகிறது வெள்ளையர் சர்க்கார். எது எப்படியாயினும் மக்கள் சார்பில் சொல்கிறேன், எங்கள் உயிர் உள்ள மட்டும் ரேகைப்பதிவு செய்து கையெழுத்துப்போட ஒப்புக் கொள்ளமாட்டோம். எங்கள் ஊரைவிட்டு வெளியேறுங்கள் என்று கூறித் தனது அங்கவஸ்திரத்தை எடுத்து வெள்ளைவீச்சு வீசினார்."

"இப்படியாகப் பேசிக் கொண்டிருந்த சமயம் கிராமத்தை சுற்றிலும் மறைந்து முற்றுகையிட்டுக் கொண்டிருந்த ஆயுதப்போலீஸ் படை கிராமத்தின் மந்தையை நோக்கி மார்ச் பண்ணி மக்கள் கூட்டத்தை வந்து வளைத்தது. உடனே பெருங்கூச்சலும், குழப்பமும் ஏற்பட்டது. பேரிரைச்சல் வானைப் பிளந்தது. இளைஞர்கள் வீடுகளுக்குப் போய் ஆயுதம் தாங்கினர். குழந்தை குட்டிகள் எல்லாம் கூக்குரலிட்டனர். பயங்கரநிலை ஏற்பட்டது."

"அதிகாரிகள், பெரிய மனிதர்கள் பலரை தங்களுடன் வைத்துக் கொண்டு, அமைதியை உண்டு பண்ணும்

வண்ணம் ஓர் இருவர்களையாவது பதிவு செய்யவும் முயன்றனர். தலைவர்களிடம் நயவஞ்சகமாகப் பேசி சமாதானப்படுத்த எடுத்த முயற்சிகள் பலன் தரவில்லை. இதற்குள் கூட்டத்தில் அரிவாள், வேல்கம்பு, கடப்பாறை முதலிய ஆயுதங்கள் தென்பட்டன. எந்த நிலைமையையும் சமாளிக்க கிராமத்தார்கள் நடவடிக்கை எடுப்பதை கண்ட போலீஸ் அதிகாரி, சர்க்கார் அதிகாரிகளை கிராமத்தின் வெளிப்புறம் கீழ்த்திசைக்கு அழைத்து கொண்டு சென்றார். அப்போது மணி காலை ஏழு. முக்கியஸ்தர்கள் மட்டும் அதிகாரிகளைத் தொடர்ந்தனர். அங்கும் பேச்சுவார்த்தை தொடர்ந்தது."

"ரேகைப்பதிவு மரணத்தைக்காட்டிலும் மோசமானது. மாண்புமிக்க எங்கள் கள்ளர் குலத்தின் மானத்தை பாதிக்கக்கூடியது. பலாத்காரம் செய்து கைது பண்ணுவீர் களேயானால் மானத்தைக் காக்கும் தன்மானப்போர் நடக்கும் என்று மக்கள் சொல்லிவிட்டார்கள். சிறிது நேரத்திற்குள் அதிகாரிகளும் பெரிய மனிதர்களும் பேசிக் கொண்டிருந்த இடத்திற்குக் கூட்டம் வந்து வளைத்து நின்றது. அப்போது காலை மணி எட்டு இருக்கும். மக்கள் யாவரும் ஆயுதங்கள் வைத்திருந்தார்கள். கூட்டத்தை பின்வாங்கி போகும்படி போலீசார் எச்சரித்தனர். கூட்டம் ஆரவாரம் செய்து கோசமிட்டது."

"போலீசார் அதிகாரிகளை மேலும் கொஞ்சம் தூரம் ஊருக்கு வெளியில் பின்காட்டச் செய்து அங்கு அதிகாரிகளைப் பாதுகாக்கும் பொருட்டு அரைச்சந்திர

வட்டத்தில் போலீஸ் வியூகம் அமைத்து அதற்குள் நிறுத்தினர். ஒரு பகுதி போலீஸ் படை, பின் தொடர்ந்து வரும் கூட்டம், அதிகாரிகளை நிறுத்தி வைக்கப் பட்டிருக்கும் இடத்திற்கு வராவண்ணம் தடுத்தனர். அது சமயம் சிறு மோதல் ஏற்பட்டது. அதுசமயம் மணி எட்டரை இருக்கும். மோதல் ஏற்படவே மந்தையிலிருந்து பெரிய படாங்கு வேட்டு கிளப்பப்பட்டது. வெடிச்சத்தம் கேட்டவுடன் முன்னேற்பாட்டின்படி தயார் நிலையிலிருந்த பக்கத்து கிராமங்களின் ஜனங்கள் ஆயுதபாணிகளாகப் பாய்ந்தோடி வந்து, பெருங்காமநல்லூரில் கிராம மக்களும் அதிகாரிகளும் மோதிக் கொண்டிருக்கும் களத்தை அடைந்தனர்."

"இந்த இடம் ஊருக்கு கிழக்கில் 250 கஜ தூரத்தில் இருந்தது. ஆரம்பத்தில் சுமார் 750 பேர்கள் அடங்கிய கூட்டம் இபபோது 3000க்கும் மேலாக உயர்ந்தது. கட்டுக்கடங்காத நிலை ஏற்படவே அதிகாரிகள் கலக்கம் அடைந்தனர். கூட்டத்தினர்கள் கல், கவண், வில், வாள், வேல், கத்தி, ஈட்டி, கம்பு, வளைதடி முதலிய ஆயுதங்கள் வைத்திருந்தனர்."

"விட்டி பெருமாத்தேவனும், மல்லர்கள் பலரும் அதிகாரிகள் நிற்கும் இடத்தை அணுகினர். விட்டி பெருமாள் போலீஸ் தலைவனைப் பார்த்து, அடாத காரியம் செய்து மக்களை அடிமைப்படுத்த வந்த பயல்களே, ஊரை விட்டு போங்கடா இல்லையேல் உங்களை வெட்டிக்

காத்தாண்டம்மனுக்கு பலிகொடுத்து விடுவோம் என்று துச்சமாகப் பேசினார்."

"கட்டுக்கடங்காத கூட்டம், திரண்டு, திரண்டு, நாலாபக்கம் ஓடவும், ஆடவும், சிலம்பம் சுற்றவும், சீட்டி அடிக்கவும் ஆக ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தது. அப்போது மணி ஒன்பதிருக்கும், காலை வெயில் கொழுத்தியது. செந்தூசி எங்கும் கிளம்பியது. இதுசமயம் போலீசார்கள் மக்கள்மேல் பாய்ந்து தாக்குவதற்கு ஆன ரியர் கார்டுகளைத் தயார் செய்து கொண்டு துப்பாக்கிப் பிரயோகம் செய்வதற்குத் துணிந்து கொண்டிருந்த சமயம்."

"போலீஸ் அணி, கூட்டத்தில் கிராம அதிகாரிகள் கிராமத்து மக்களை அடையாளம் காட்டும்படி சொல்லிக் கொண்டு மக்கள் சிலரை விலங்கிடுவதற்குப் பிடித்தனர். அதுதான் சமயம் அடே அப்பா-மக்கள் பதறிப்போய் போ்லீசார் மேல் பாய்ந்து ஆட்களைப் பிடித்த திசையில் கூக்குரலிட்டுக் கொண்டு பிடிக்காதே, பிடிக்காதே என்று திரண்டனர். இது சமயம் மணி ஒன்பதரையிருக்கும். போலீசார் சுட்டது இடிமுழக்கம்போல் சப்தம் கேட்டது. யாரும் அடிபடவில்லை. குண்டுகள் ஆகாயத்தை நோக்கியது, சுட்ட போலீசை சும்மா விடவில்லை இளைஞர்கள். ஆயுதங்களுடன் போலீஸ் வரிசையில் நுழைந்து முன்னும் பின்னும் நல்லபடியாகத் தாக்கினர். கணநேரம் விட்டிருந்தால் காக்கித் தொப்பிகள் கதி என்ன ஆகியிருக்குமோ? போலீஸ் பாதுகாப்பு அணிக்குள் நின்று கொண்டிருந்த உசிலம்பட்டித் தாசில்தார் ஜான் அன்பு நாடார்

இரண்டு ரவுண்டுகள் கூட்டத்தை நோக்கிச் சுடும்படி ஆணை பிறப்பித்தார்."

"களத்தில் அதிகாமானவர்கள் குண்டுக்கிரையாகி விழவில்லை என்பதைக் குறித்துக் கோபங்கொண்டு, சர்க்கிள் இன்ஸ்பெக்டர் ராஜுப்பிள்ளை போலீஸ் படைத்தலைமயை ஜார்ஜண்டு கீட்ஸ், ஜமேதார் சீதராம்தாஸ் அவர்களிடமிருந்து தானே ஏற்றுக்கொண்டு போலீசார்களை நோக்கி, ஓடும் கூட்டத்தினரைப் பின்தொடர்ந்து தாக்கும்படி கமாண்டு செய்தான். அத்துடன் ராஜுப்பிள்ளையும், சப்-இன்ஸ்பெக்டர் சீனிவாச நாயுடுவும் தாங்கள் முன் விரோதம் கொண்டிருந்தவர்களை குறிபார்த்துச் சுட்டுத் தள்ளிய, சர்வ சண்டாளத் தனத்தையும் செய்தனர். போலீஸ் படையையும், போலீஸ் படையின் அதிகாரிகளையும் ராஜுப்பிள்ளை கெட்ட வார்த்தை சொல்லித் திட்டினான் சரியானபடி. சூட்டிங் நிறைவேறவில்லை என்று கண்டித்தான்."

"இத்தகைய துப்பாக்கி பிரயோகத்தில் பெரும் புகை மண்டலம் உண்டாகிய காரணத்தாலும், காவல் படையினரை எதிர்த்தாக்குதல் செய்ய துப்பாக்கி போன்ற நவீன ஆயுதங்கள் கள்ளர்கள் கையில் இல்லாத காரணத்தாலும், போர் நடந்த இடம் திறந்த புல்வெளியாக இருந்த காரணத்தாலும், மக்கள் ஆங்காங்கு தப்பி ஓடினர். போர் நடந்த பின்னர் காவல்துறையினரில் துப்பாக்கிச் சூட்டால் 17பேர் உயிரிழந்தவர்கள் என்று கணக்கிட்டு பெருங்காமநல்லூரில் நினைவுத்தூண் ஒன்று எழுப்பப்பட்டுள்ளது. ஆனால் அந்த துப்பாக்கிச் சூட்டில்

இறந்தவர்களில் எண்ணிக்கை 11 பேர் என்று தமிழ் நாளிதழ் கூறுகிறது;[22] இறந்த 17 பேர்களின் பட்டியல் பின்வருமாறு."[23]

1. சிவணான்டித் தேவர் மகன் மாயாண்டித் தேவர்
2. சின்னத்தேவன் மகன் குள்ளன் பெரிய கருப்பன்
3. சடையத்தேவன் மகன் விருமாண்டித்தேவர்
4. காட்டு பெரிய கருப்பத்தேவர் மகன் சிவன்காளைத் தேவர்
5. ஆங்கன் சின்னான்டித்தேவர் மகன் பெரியாண்டித்தேவர்
6. பூசாரி சடையத்தேவர் மகன் ஓவாயன் என்ற முத்துக்கருப்பன்
7. பெருமாத்தேவர் மகன் மோளை சின்னாத்தேவர்
8. கொள்ளிச் சூரியன் மாயத்தேவர் மகன் மாயாண்டி தேவர்
9. சுப்புத்தேவர் மகன் முனியாண்டி என்ற மாயாண்டித் தேவர்
10. கெண்டியன் என்ற பெருமாள் மகன் உடையார் தேவர்
11. உடையார் தேவர் மகன் சின்ன மாயத்தேவர்
12. தெய்வயானை மாயாண்டித்தேவர் மகன் பெரிய கருப்பத்தேவர்
13. தோல் நல்லுத்தேவர் மகன் வீரணத் தேவர்
14. நடயநேரி பெரிய மாயத்தேவர் மகள் மாயக்காள்
15. பஞ்சாண்டி உடையார்த்தேவர் மகன் முத்தையா தேவர்
16. கெண்டியான் பெரிய கருப்பத்தேவர் மகன் வீரத்தேவர்
17. மாயழகுத்தேவன் மகன் மாயாண்டித் தேவர்

இறந்துவிட்ட இவர்களில் மாயக்காள் என்பவரின் மரணம் அனைவரின் நெஞ்சையும் தொடுவதாக உள்ளது. இந்த மாயக்காள் குண்டடிபட்டு, குத்துயிர் கொலையுயிராக கிடந்த தியாகிகளுக்கு தண்ணீர் வழங்கச் சென்றபோது அவரை போலீசார் சுட்டுக் கொன்றனர். இந்நிகழ்ச்சிக்குப் பின்னர், இத் தன்மானப் போரில் ஈடுபட்ட சிலரைக் கைது செய்து பெருங்காமநல்லூரிலிருந்து 20கி.மீ. தொலைவிலுள்ள திருமங்கலத்திற்கு அழைத்துச் சென்றனர். அவ்வாறு செல்லும் வழியில் சாத்தன்குடி கிராமத்தில் வாழ்ந்து வந்த கள்ளர் சமூகத்தினர் வழிமறித்து இவ்வாறு கைது செய்வது தவறு என்று குரல் கொடுத்தனர். இருந்தபோதிலும், கைது செய்தோர்களை விடுவிக்க முடியவில்லை. எனவே, கால்நடையாக நடந்து வந்த கைது செய்யப்பட்ட கள்ளர் வகுப்பைச் சார்ந்தவர்களுக்கும், அவர்களைக் கைது செய்து வந்த காவல்துறையினருக்கும் மதிய உணவு வழங்கி திருமங்கலத்திற்கு அனுப்பி வைத்தனர்.[24] இது தொடர்பான வழக்கை காங்கிரஸ் பிரமுகரும், மதுரை வழக்கறிஞருமான ஜார்ஜ் ஜோசப் என்பவர் பிரமலைக்கள்ளர்களுக்காக நடத்தினார்.

## பெருங்காமநல்லூர் கலவரமும், ஜாலியன் வாலாபாக் படுகொலையும் - ஓர் ஒப்பீடு

ஜாலியன் வாலாபாக் படுகொலை என்பது நீதிபதி ரௌலட் சட்டத்தை எதிர்த்து எழுந்த போராட்டத்தின் ஒரு கட்டமாகும். ரௌலட் சட்டம் (Rowlatt Act) என்பது, முதல் உலகப் போர் முடிந்த பின்னர் இந்திய மக்களை அடக்கி

ஆள்வதற்கு ஆங்கிலேய அரசுக்கு மிதமிகு அதிகாரம் தேவை என்று கொண்டுவரப்பட்ட ஒரு சட்டமாகும். ஏனென்றால் தேசிய இயக்கத்தில் அனைத்து தரப்பு இயக்கங்களும் அதாவது காங்கிரஸ் கட்சியில் இருந்த மிதவாதிகள், தீவிரவாதிகள், முஸ்லீம்-லீக் கட்சியினர் மற்றும் Home Rule இயக்கத்தைச் சார்ந்தவர்களும் ஒன்றாக நின்று போராடிய காலமாகும். எனவே 1917ஆம் ஆண்டு நீதிபதி ரௌலட் என்பவரின் தலைமையில் குழு ஒன்றை நியமித்து அக்குழு கொடுத்த அறிக்கையின் அடிப்படையில் மத்திய சட்டமன்றத்தில் 1919ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் இரண்டு மசோதாக்கள் அறிமுகப்படுத்தப்பட்டன. அந்த இரண்டு மசோதாக்களில் ஒன்றுதான் ரௌலட் சட்டம் என்ற பெயரில் 1919ஆம் ஆண்டு மார்ச் 17ஆம் தேதி சட்டமாக ஆக்கப்பட்டது. இச்சட்டத்தின்படி புரட்சியாளர்களை அடக்குவதற்கு இதுவரை கண்டிராத அதிகமான அதிகாரம் காவல்துறையினருக்கு வழங்கப்பட்டிருந்தது.[25] இதனைக் கண்டித்து டெல்லி, அகமதாபாத் மற்றும் பஞ்சாப் ஆகிய பகுதிகளில் புரட்சி ஏற்பட்டது. காங்கிரஸ் தலைவர்கள் மகாத்மா காந்தி, டாக்டர். சத்தியபால் மற்றும் கிச்லியூ போன்ற தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். சத்தியபால் மற்றும் கிச்லியூ ஆகியவர்கள் பஞ்சாப் மாகாணத்திலுள்ள அமிர்தசரஸ் நகரைச் சார்ந்தவர்கள். எனவே தங்களுடைய தலைவர்களை விடுதலை செய்யக் கோரி அமிர்தசரஸ் மக்கள் அனைவரும் ஊர்வலம் சென்றனர். ஊர்வலத்தில் துப்பாக்கிச் சூடு நடைபெற்றது. இதனால் கோபமடைந்த பொதுமக்கள் சமயப் பிரச்சாரத்தில் ஈடுபட்டிருந்த

M.S.Sherwood உள்ளிட்ட 5 ஆங்கிலேயர்களை கொன்றுவிட்டனர். எனவே, ஜெனரல் டையர் என்ற ராணுவ அதிகாரி அமிர்தசரஸ் மக்களுக்கு ஒரு பாடம் புகட்ட வேண்டும் என்று கருதினார். அமிர்தசரஸ் முழுவதும் ராணுவ முகாம் போல் காணப்பட்டது. 1919ஆம் ஆண்டு ஏப்ரல் 12ஆம் நாள் அமிர்தசரஸில் பொதுக்கூட்டங்கள் நடத்துவது தடை செய்யப்பட்டது. இத்தடையை மீறி அமிர்தசரஸில் ஜாலியன் வாலாபாக் என்னுமிடத்தில் ஏப்ரல் 13ஆம் நாள் பொதுக்கூட்டம் நடத்துவதென்று மக்கள் முடிவு செய்தனர். ஜாலியன் வாலாபாக் என்பது மதுரையிலுள்ள தமுக்கம் கலையரங்கத்தைப் போன்று சுற்றுச்சுவர்களால் சூழப்பட்டு கட்டப்பட்டிருந்த ஒரு கலையரங்கமாகும். இந்தக் கலையரங்கில் முன்னறிவிப்பு ஏதுமின்றி ஜெனரல் டையர் நுழைந்து 100 இந்தியச் சிப்பாய்கள் மற்றும 50 பிரிட்டிஷ் சிப்பாய்களைக் கொண்டு துப்பாக்கிச் சூடு நடத்தினார். கிட்டத்தட்ட 1650 குண்டுகள் சுடப்பட்டன. இத்துப்பாக்கிச் சூட்டில் அரசின் கணக்குப்படி 379 பேர் இறந்தார்கள் என்றும், 1200 பேர் காயமுற்றனர் என்றும் கூறப்பட்டது. இதனைத் தொடர்ந்து பஞ்சாப் மாகாணத்தில் 5 மாவட்டங்களில் ராணுவ ஆட்சி பிரகடனப்படுத்தப்பட்டது. இதனைக் கண்டித்து நாடு தழுவிய அளவில் மக்கள் புரட்சி செய்தனர்.[26]

இதே காலகட்டத்தில்தான் பிரமலைக்கள்ளர்களின் ஒட்டு மொத்த சமுதாயத்தின் மீது 1911ஆம் ஆண்டின் குற்றப்பரம்பரைச்சட்டத்தை 1918இல் அமுல்படுத்துவதென்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.[27] எனவே 1917-18 ஆகிய

ஆண்டுகளில் தீவிரமாக செயல்பட்டு வந்த தேசிய புரட்சியை தடுக்க வேண்டுமென்று எடுத்த நடவடிக்கைகளில் ரௌலட் சட்டமும், பிரமலைக்கள்ளர்கள் ஒட்டு மொத்த சமுதாயத்தின் மீது குற்றப்பரம்பரை சட்டத்தை 1918இல் திணிக்க வேண்டுமென்ற உத்தரவும் இணையான முக்கியத்துவம் வாய்ந்தவைகளே. 1918இல் கொண்டுவரப்பட்ட ரௌலட் சட்டத்திற்கு எதிராக டெல்லி, அகமதாபாத் மற்றும் அமிர்தசரஸ் போன்ற இடங்களில் நடைபெற்ற புரட்சிகளைப் போன்று மதுரை மாவட்டத்தில் ஜார்ஜ் ஜோசப் போன்ற காங்கிரஸ் பிரமுகர்களுடைய ஒத்துழைப்போடு கள்ளர்களும் மற்றும் காங்கிரஸ் இயக்கத்தில் இருந்து வந்த பல தலைவர்களும் அங்குமிங்கும் கூட்டங்களை நடத்தி எதிர்ப்புக்களை தெரிவித்துக் கொண்டுதான் இருந்தார்கள். இவ்வெதிர்ப்புளை கண்ணுற்ற ஆங்கில அரசு கள்ளர்கள் மிகவும் முரடர்கள், சுதந்திர வேட்கை உள்ளவர்கள், சுதந்திரமாக சிந்தித்து தன்னிச்சையாக செயல்படும் ஆற்றல் உள்ளவர்கள், படிப்பறிவு இல்லாவிட்டாலும் சிறந்த புத்திகூர்மை உள்ளவர்களாக இருக்கிறார்கள், எனவே இக்கள்ளர்கள் மீது ஒட்டுமொத்தமாக குற்றப்பரம்பரைச் சட்டத்தை திணிப்பதற்கு முன் அவர்களின் குணாதிசயங்களை தெரிந்து கொள்ள லவ்லக் என்பவரைப் பணித்து அறிக்கை சமர்ப்பிக்கும்படி சென்னை அரசு கேட்டுக் கொண்டது. எனவே, குற்றப்பரம்பரைச் சட்டத்தை 1918ஆம் ஆண்டு ஒட்டு மொத்தக் கள்ளர்கள் மீது புகுத்த வேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தாலும், 24.2.1920ஆம் ஆண்டு

லவ்லக் சமர்ப்பித்த அறிக்கையின் அடிப்படையில்தான் அவ்வுத்தரவினை செயல்படுத்த முடிவுசெய்தனர்.

பெருங்காமநல்லூரில் குற்றப்பரம்பரைச் சட்டத்தை அமுல்படுத்தும்போது, கள்ளர் இனத்தவர் காவல் படையினரை எதிர்த்து போர் செய்தனர். ஆனால் ஜாலியன் வாலாபாக் படுகொலையில் ரௌலட் சட்டத்தை எதிர்த்து புரட்சி செய்த இந்திய தேசிய காங்கிரஸ் தலைவர்களை கைது செய்ததை கண்டித்தும், அமிர்தரசரஸில் காவல்துறையின் அடக்கு முறையை கண்டித்தும் தடையை மீறி பொதுக்கூட்டம் நடத்தினர்.

ஜாலியன் வாலாபாக் என்னும் இடம் நான்கு சுற்றுச்சுவர் வைத்து அமைக்கப்பட்டு இருந்த கலையரங்கம், பெருங்காமநல்லூர் போர் நடந்த இடம் ஒரு திறந்த வயல்வெளி. எனவே இந்த இரு நிகழ்ச்சிகளில் நடந்த உயிர்பலி மற்றும் காயமுற்றவர்களின் எண்ணிக்கை வேறுபாடாக இருக்கும். ஜாலியன் வாலாபாக் படுகொலையில் இறந்தவர்களின் எண்ணிக்கை 379 பேர் என்றும் 1200 பேர் காயமுற்றோர்கள் என்றும் அரசு கணக்கிட்டு உள்ளது. ஆனால் காங்கிரஸ் கட்சியின் கணிப்புப்படி இறந்தவர்கள், காயமுற்றவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும் என்று கூறப்படுகிறது. பெருங்காமநல்லூர் போரிலோ இறந்தவர்களின் எண்ணிக்கை 17, காயமுற்றவர்கள் பல பேர்கள். இதற்கு காரணம் துப்பாக்கிச் சூடு நடந்தவுடன் அங்கு கூடியிருந்த 3000 கள்ளர்களும் தப்பி ஓடுவதற்கு ஏற்றவகையில்

வயல்வெளியாக இருந்தது. ஆனால் ஜாலியன் வாலாபாக் என்ற இடமோ ஒரு கலை அரங்கு, அக்கலை அரங்கிற்கு ஒரே வாயில்தான் உண்டு. அந்த வாயிலில் நுழைந்து ஜெனரல் டயர் 1650 தோட்டாக்களை பிரயோகித்து மக்களை கொன்று குவித்து இருக்கின்றார். ஜாலியன் வாலாபாக் போன்ற இடமாக பெருங்காமநல்லூர் இருந்திருக்கு மேயானால் இப்போரில் மரணம் அடைந்தவர்களுடைய எண்ணிக்கையும், காயம் அடைந்தவர்களின் எண்ணிக்கையும் ஜாலியன் வாலாபாக் படுகொலையை விட அதிகமாகவே இருந்து இருக்கும். இருந்த போதிலும் இந்திய விடுதலை இயக்கத்தில் ஜாலியன் வாலாபாக் படுகொலைக்கு இந்திய அளவில் இருந்த அங்கீகாரம் பெருங்காமநல்லூருக்கு கிடைக்கவில்லை. ஜாலியன் வாலாபாக் படுகொலையை கண்டித்து மதுரையில் கூட ஆலோசனை கூட்டம் நடத்தப்பட்டது. அதற்கு காரணம் ஜாலியன் வாலாபாக் படுகொலை நகர்புறம் சார்ந்த படுகொலையாகும். தேசிய இயக்கத்தோடு இணைந்து அந்த இயக்க தலைவர்களை சிறையில் இருந்து விடுவிக்க வேண்டி நடந்த ஒரு நிகழ்ச்சி ஆகும். படித்தவர்கள் அதிகம் கலந்து கொண்ட ஒரு நிகழ்ச்சியாகும். ஆனால் பெருங்காமநல்லூர் கலவரம் ஒரு சிறு கிராமத்தில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி. படித்தவர்கள் அதிகம் இல்லாத பாமரமக்கள் நடத்திய ஒரு புரட்சி. மதுரை மற்றும் சென்னை மாகாணத்தில் ஒரு சிறு பகுதியில் இருந்த, ஜார்ஜ் ஜோசப் போன்ற காங்கிரஸ் தலைவர்கள் போன்றவர்களோடு தொடர்புடைய நிகழ்ச்சி ஆகும். ஜாலியன் வாலாபாக்

படுகொலை, காந்தி போன்ற தலைவர்களால் ஆதரவு அளிக்கப்பட்ட ஒரு நிகழ்ச்சி. பெருங்காமநல்லூர் கலவரத்தை காந்தி போன்ற மிதவாத தலைவர்கள் அக்கால கட்டத்தில் ஆதரிக்கவில்லை. ஏனென்றால் மகாத்மா காந்தி ஆரம்ப காலத்தில் ஆங்கிலேயர்களின் சட்டதிட்டங்கள் நியாயமாக இருக்கலாம் என்று நம்பியவர். எனவே 1931ஆம் ஆண்டுதான் ஆங்கிலேயரின் சட்டத்தை எதிர்க்க வேண்டும் என்று நினைத்தவர். 1931இல் தான் சட்டமறுப்பு இயக்கம் ஒன்றை காந்தியடிகள் துவக்கினார். ஆனால் முற்போக்குத் தலைவர்களான பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர், சுபாஷ் சந்திரபோஸ் ஆகியோரின் முயற்சியின் காரணமாக அகில இந்திய காங்கிரஸ் மாநாடு 1939-ல் திரிபுரியில் கூடியபோது M.L. ஆனே தலைமையில் குற்றப்பரம்பரைச் சட்ட எதிர்ப்பு சிறப்பு கருத்தரங்கு நடைபெற்றது. மேலும் அம்மாநாட்டில், அகில இந்திய ரீதியில் குற்றப்பரம்பரைச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டும் என்ற தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.[28] எனவே பெருங்காமநல்லூர் போர் இந்திய அளவில் அங்கீகரிக்கப்பட்ட ஒரு தேசிய இயக்கமாக சித்தரிக்கப்படவில்லை. 1919இல் கொண்டு வரப்பட்ட ரௌலட் சட்டத்தை எதிர்த்த மகாத்மா காந்தி 1911இல் இயற்றப்பட்ட குற்றப்பரம்பரை சட்டத்தை எதிர்க்கவில்லை. இத்தகைய சூழ்நிலையில் 1800இல் பாளையக்காரர்களை அடக்கி சென்னை மாகாண அரசை உருவாக்கிய ஆங்கிலேயர்கள் கள்ளர்களையும், கள்ளர்களின் அரசாட்சி முறையான காவல் முறையினையும், 1920ஆம் ஆண்டு நடந்த பெருங்காமநல்லூர் கலவரம்வரை

அடக்கமுடியவில்லை என்பதைதான் காட்டுகின்றது. எனவே ஆங்கிலேயருடைய ஆதிக்கப் போராட்டம் , 1800இல் பாளையக்காரர்களை அடக்கியதோடு முடிந்துவிட்டது என்று கூற முடியாது. 1920 வரை அதாவது பெருங்காமநல்லூர் கலவரம்வரை ஆங்கிலேயருடைய ஆதிக்க போராட்டம் நீடித்தது என்று கூற வேண்டும். 1920க்குப் பின்னரும் பிரமலைக்கள்ளர் பஞ்சாயத்துமுறையை ஒவ்வொரு கிராமத்திலும் உருவாக்கி அந்த பஞ்சாயத்தில் அந்தந்த கிராமத்தில் உள்ள முக்கிய கள்ளர் பிரமுகர்களை உறுப்பினர்களாக நியமித்து அவர்களின் மூலமாகத்தான் அந்தந்த கிராம கள்ளர்களை நிர்வாகம் செய்தார்கள். இதன் மூலம், பிரமலைக்கள்ளர்கள் எக்காலத்திலும் தன்னரசுகளாகவே வாழ்ந்து வந்தனர் என்பது தெளிவாகிறது.

## NOTES

1. Muthu Thevar P., **Muvendarkula Thevar Samuha Varalaru (T).**, Kakuveeran Publishers, Madurai, 1975, p.402.
2. G.O. No.1331, Home (Judicial), dated 5.6.1918.
3. Muthu Thevar, **Op.cit**., p.404
4. **Ibid**., p. 405
5. **Ibid**., p. 406
6. **Ibid**., p. 407
7. **Ibid**., p. 408
8. **Ibid**., p. 409
9. **Ibid**.

10. **Ibid.**, p. 410
11. **Ibid.**, p. 437
12. **Ibid.**, p. 413
13. **Ibid.**, p. 414
14. 14. David Arnold, **Police Power and Colonial Rule, Madras 1859-1947**, Oxford University Press, Madras 1986, p.
15. Muthu Thevar, **Op.cit.**, p. 414
16. **Ibid.**, p. 415
17. **Ibid.**, p. 416
18. **Ibid.**, p. 417
19. **Ibid.**, p. 420
20. **Ibid.**, p. 421
21. **Ibid.**, p. 422
22. **Desaphaktan** ( MNNR) Madras, dated 17.5.1920
23. Muthu Thevar, **Op.cit.**, p.428-430
24. **Ibid.**, p.434.
25. Kauleshwar Rao, **Freedom Struggle**, 2000, p.205.
26. **Ibid.**, p.206.
27. G.O.No. 1331, Home (Judicial), dated 5-6-1918
28. Perumal, A.R., **Mudisoodamannar Pasumpon Muthuramalinga Thevar Veera Varalaru,** Pasumpon, 1993.

## பாகம் - 4

# பெருங்காமநல்லூர் போரின் தாக்கம்

3.4.1920ஆம் ஆண்டு பெருங்காமநல்லூரில் நடைபெற்ற இப்போர், சிறிய கலவரம் என்றாலும்கூட பெரிய தாக்கத்தை ஏற்படுத்திய அடித்தள மக்களின் எழுச்சிப் போர் ஆகும். இப்போரில் பதினேழு பேர் இறந்துள்ளனர். நூற்றுக்கணக்கானோர் காயமுற்றனர். இந்நிகழ்ச்சியில் பிரமலைக்கள்ளர்களின் எதிர்ப்பு உணர்வை கண்ணுற்ற பிரிட்டிஷ் அரசு, மாவட்ட காவல்துறை அதிகாரி லவ்லக் என்பவர் கொடுத்த அறிக்கையின் அடிப்படையில் பிரமலைக்கள்ளர்கள் சீர்திருத்த திட்டங்களை செயல்படுத்த தொடங்கியது. இச்சீர்திருத்த திட்டங்களை நிறைவேற்றாமல் குற்றப் பரம்பரை சட்டத்தை இவர்கள் மேல் திணிக்க முடியாது என்ற முடிவுக்கு வந்தது.

அதேபோன்று பிரமலைக்கள்ளர்களும் நேரடியாக பிரிட்டிஷ் அரசை எதிர்க்க முடியாது என்று உணர்ந்ததோடு தங்களுக்கு பலவகைகளில் சலுகைகளை அளிக்க முன்வந்த ஆட்சியாளரோடு ஒத்துப்போவது என்ற நிலைக்கு வந்தனர். எனவே இத்திட்டத்தை செயல்படுத்த சில வழிமுறைகளை கையாண்டனர். அதாவது பஞ்சாயத்துமுறை ஒன்றை கையாண்டனர். இத்தோடு நன்னடத்தை காலமுறை (Abeyance System) என்ற முறையினையும் கையாண்டனர்.

கள்ளர்கள் வாழும் கிராமங்களில் பஞ்சாயத்து உறுப்பினர் என்று ஐந்து உறுப்பினர்களை அரசு நியமனம் செய்தது. அவர்களில் ஒருவர் தலைவர், மீதி நான்குபேர் உறுப்பினர்கள். அந்தந்த கிராமத்தை சார்ந்த ஓரளவு படித்தவர்கள், வசதி படைத்தவர்கள் ஆகியவர்கள் இதில் உறுப்பினர்களாக இருந்தனர். இப்பஞ்சாயத்து உறுப்பினர்களுக்கு குற்றப்பரம்பரைச் சட்டத்தில் இருந்து விலக்கு அளிக்கப்பட்டு இருந்தது. இப்பஞ்சாயத்து எவ்வாறு செயல்படவேண்டும் என்று சட்டதிட்டங்கள் வகுக்கப்பட்டன. ஆனால் இச்சட்டதிட்டங்களை ஆங்கிலேய அரசு தன்னிச்சையாக தயாரிக்கவில்லை. கள்ளர் நாட்டில் உள்ள பெருந்தனக்காரர்கள் ஆலோசனையின்படிதான் சட்டதிட்டங்கள் வகுக்கப் பட்டன. அத்தகைய பெருந்தனக்காரர்கள்:

1) கீழஉரப்பனூர் சீனி பெருமாள்தேவர், காராமணி, கல்யாணித் தேவர், செல்லம்பட்டி பூசாரி தவசித்தேவர், பொட்டுலுப்பட்டி பெரியவீட்டு விருமாண்டித் தேவர், கம்பம் இராமசாமித் தேவர். வளையபட்டி சின்னச்சாமி தேவர், ஒத்தப்பட்டி ஒச்சாத்தேவர் ஆகியோர் ஆவர்.[1]

இப்பஞ்சாயத்தாரர்கள் போலீஸ் அதிகாரிகளுக்கும், இதர சர்க்கார் அதிகாரிகளுக்கும் ஆலோசகர்களாகவும், குற்றவாளிகளை அடையாளம் காட்டி அவர்களை பிடிப்பதற்கு காவல் துறையினருக்கு உதவியாகவும் செயல்பட்டனர். அரசு மக்களுக்கு செய்கின்ற சலுகைகளான

தர்க்காஸ்து வழங்குதல், தர்க்காஸ்து கடன் கொடுத்தல், கல்வி வசதி செய்தல் போன்றவற்றை இப்பஞ்சாயத்தாரின் சிபாரிசுகளின்படி செய்து வந்தது. அதே போன்று குற்றப்பரம்பரை சட்டத்தை அமல்படுத்துவதிலும், கள்ளர்களை ரேகை பதிவு செய்வதிலும் போலீசார் பஞ்சாயத்தாரின் ஆலோசனைப்படியே செய்துவந்தனர். எனவே, காவல் துறையினர் தங்களுக்கு தேவையான சில ரகசிய செய்திகளைக் கூட இப்பஞ்சாயத்து மூலம் பெற்று வந்தனர். இதன் மூலம் நமக்கு தெரிய வருவது என்னவென்றால் பிரிட்டிஷ் ஆட்சி 1920-ஆம் ஆண்டுவரை இப்பிரமலைக் கள்ளர்கள் மீது தங்களின் முழு அதிகாரத்தை செலுத்தமுடியவில்லை. 1920க்குப் பின்னரும் கள்ளர் பஞ்சாயத்து மூலமாகத்தான் அக்கள்ளர்கள் மீது தங்களுடைய அதிகாரத்தை செலுத்த முடிந்தது. இது எதைப்போல என்றால் இராமநாதபுரத்தில் நாயக்கர் ஆட்சிக் காலத்தின்போது மறவர் சீமையில் முத்துக்கிருஷ்ண நாயக்கர், சேதுபதி ஆட்சியை மீண்டும் புதுப்பித்ததற்கு ஒப்பாகும்.

மதுரையில் நாயக்கர் ஆட்சி இருந்த போது இராமேஷ்வரத்திற்கு வழிபடச் சென்ற பல பக்தர்களுக்கு பாதுகாப்பு இல்லை. அவர்கள் செல்லும் வழியில் சேதுபதி நாட்டில் வழிப்பறி கொள்ளை நடைபெற்று வந்தது. ஆனால் அவர்களை அடக்க மதுரை நாயக்கர் அரசின் அதிகாரிகளால் முடியவில்லை. எனவே மறவர் சீமையில் சட்டம் ஒழுங்கை நிலைநாட்ட மறவர்களால்தான் முடியும் என்று கருதிய முத்துகிருஷ்ண நாயக்கர், குட்டன்

சேதுபதியை இராமநாதபுர சேதுபதியாக நியமித்தார். இது முள்ளை முள்ளால் எடுக்க வேண்டும் என்ற முதுமொழிக்கு ஏற்ப மறவர்களை நிர்வகிக்க மறவர்களால்தான் முடியும் என்று நாயக்கர் ஆட்சியாளர் நினைத்தது போன்று, கள்ளர்களை கள்ளர்களால்தான் நிருவகிக்க முடியும் என்று, பஞ்சாயத்துமுறையை பிரிட்டிஷார் புகுத்தினர்.

இத்தகைய அமைப்பின் மூலமாக சமூகசீர்திருத்த திட்டங்கள் ஓரளவு சிறப்பாக செயல்பட்டு, பிரமலைக் கள்ளர்களின் சமூக பொருளாதார முன்னேற்றத்திற்கு வழிகோலியது என்று கூறலாம். அதாவது கூட்டுறவு சங்கத்தின் மூலமாக கடன் உதவிகள் வழங்கப்பட்டன. அக்கடன் உதவியை பெற்ற கள்ளர்கள் கிணறு வெட்டவும், விவசாயத்திற்கு தேவையான பயிர்க்கடன் பெறவும், ஆடு,மாடு வளர்க்கவும் பயன்படுத்தி பொருளாதாரத்தில் ஓரளவு தன்னிறைவு பெற்றனர். பள்ளிகள் பல கள்ளர் கிராமங்களில் உருவாக்கப்பட்டது. இப்பள்ளிகளில் பயின்ற ஆரம்ப கட்ட பிரமலைக் கள்ளர்களில் பலர் முதல்நிலை ஆசிரியர்களாகவும், இரண்டாம் நிலை ஆசிரியர்களாகவும் பணியாற்ற முடிந்தது. குற்றபப்பரம்பரை சட்டத்தின் தாக்கத்தால் இத்தகைய பலன் பெற்ற பிரமலைக் கள்ளர்களை முதல் சந்ததியினர் என்று நாம் கணக்கிட்டால், இவர்களுடைய குழந்தைகள் இவர்களால் கற்பிக்கப்பட்ட மாணவர்கள் பலர் 1950-60களில் காவல்துறை அதிகாரிகளாகவும் உயர்நிலை பள்ளி ஆசிரியர்களாகவும், கல்லூரி ஆசிரியர்களாகவும், வழக்கறிஞர்களாகவும் இருக்கின்றனர். இத்தகையோரை இரண்டாம் சந்ததியினர்

என்று அழைக்கலாம். இவ்வாறு உருவாக்கப்பட்ட பலதரப்பட்ட துறைகளில் பணியாற்றிய பிரமலைக் கள்ளர்களின் குழந்தைகள் பலர் தற்போதைய சூழ்நிலையில் பொறியியல் வல்லுநர்களாகவும், மருத்துவர்களாகவும், வெளிநாடுகளுக்கு சென்று பல துறைகளில் பணியாற்றுகின்ற அறிஞர்களாகவும் உருவாகியுள்ளனர். இந்த வகையில் பார்த்தால் பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தின் போது, பிரமலைக் கள்ளர்களுக்காக கள்ளர் சீரமைப்பு துறை ஒன்றை உருவாக்கி அதன் மூலம் கள்ளர்களுக்கு அளித்த கல்விச் சலுகையால் பெறப்பட்ட மேலே குறிப்பிட்ட சமுதாய வளர்ச்சி மிகவும் போற்றத்தக்க ஒன்றாகும். இந்த அடிப்படையில் ஆங்கிலேயர்கள் இவ்வகுப்பினருக்கு காட்டிய சலுகைகளைப் போல் விடுதலைக்குப்பின் ஆட்சிக்கு வந்த காங்கிரஸ் கட்சி எதையும் செய்யவில்லை என்று தோன்றுகிறது. அதற்குப் பின் ஆட்சிக்கு வந்த திராவிட முன்னேற்றக்கழகம் இட ஒதுக்கீட்டு கொள்கை அடிப்படையில் குற்றப் பரம்பரையினரை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்த்ததன் மூலமாகவும் கள்ளர் சீரமைப்பு பள்ளிகளில் ஆசிரியர் நியமனம் ஆகியவற்றில் பிரமலைக் கள்ளர்களுக்குத்தான் முதல் இடம் கொடுக்க வேண்டும் என்ற ஒரு அரசின் ஆணையை அன்றைய மறைந்த முன்னால் உசிலம்பட்டி தொகுதி சட்டமன்ற உறுப்பினர் திரு.வல்லரசு அவர்களின் முயற்சியால் பிறப்பிக்கப்பட்டதன் மூலமாகவும், பிரமலைக் கள்ளர்கள் பயன் அடைந்துள்ளார்கள. இச்சலுகைகளை செயல்படுத்துவதில் எந்தவித இடையூறும் செய்யாமல்,

இவ்வகுப்பினருக்கு இருந்து வரும் சலுகைகளை முழுமனதோடு இன்றைய அகில இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக அரசும் செய்து வருகின்றது என்பதில் சந்தேகம் இல்லை. மேலும் பிரமலைக் கள்ளர்களின் வளர்ச்சியில், மறைமுகமாகவோ நேரடியாகவோ அ.தி.மு.க. அரசு இடையூறு விளைவிப்பது இல்லை என்பதும் உண்மை. இவ்வேளையில் இவ்வரசினை வேண்டிக் கொள்வது என்னவென்றால் மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலுக்கு ஒதுக்கப்பட்டுள்ள 20% இட ஒதுக்கீட்டில் 10% விகிதத்தை இச்சீர் மரபினருக்கு என்று தனியாக ஒதுக்கீடு செய்ய முடியுமா என்று பரிசீலனை செய்யலாம்.

இருந்தபோதிலும் சமூக வாழ்க்கையில் அவர்களுடைய சுதந்திரமான நடமாட்டம் 1911-ஆம் ஆண்டு குற்றப்பரம்பரைச் சட்டத்தின் கெடுபிடியான பிரிவுகளால் தடை செய்யப்பட்டிருந்தது. தாங்கள் வசிக்கும் ஊரை விட்டு இன்னொரு ஊருக்கு செல்ல வேண்டும் என்றால் அருகாமையில் உள்ள காவல் நிலையத்திடமோ அல்லது பஞ்சாயத்து உறுப்பினரிடமோ இவர்கள் அனுமதி பெற வேண்டும். இரவு நேரங்களில் காவல் நிலையத்திற்குச் சென்று கைரேகை பதிவு செய்ய வேண்டும். அவ்வாறு பதிவு செய்யவில்லை என்றால் அதையே குற்றமாக கருதி அதற்கும் தண்டனை வழங்கினர். இவ்வாறாக இக்குற்றப்பரம்பரை சட்டத்தால் பிரமலைக் கள்ளர்களின் தனிமனித உரிமை முழுமையாக பறிக்கப்பட்டு இருந்தது. இச்சட்டத்தைப் பற்றிக் கூறும்போது W.J. Hatch என்பவர்:

"I was doubtful whether any other Act on the statute book goes so far in giving the police powers to take away a man's freedom" என்று கூறுகிறார்.[2]

எனவேதான் பிரமலைக்கள்ளர்களில் எவரும் இந்திய தேசீய காங்கிரசில் முழுமையான பங்கு எடுக்க முடியவில்லை. இருந்தபோதிலும் கூட இவர்கள் மீது திணிக்கப்பட்ட சட்டத்தை, சட்டத்தின் கடுமையை காங்கிரஸ் கட்சி வன்மையாக கண்டித்தது. குறிப்பாக பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் இச்சட்டத்தை நீக்க பல போராட்டங்கள் செய்தார். திரு. ராகவய்யா என்னும் சட்டமன்ற உறுப்பினர் 1947இல் சட்டமன்றத்தில் பேசும்போது குற்றப்பரம்பரைச் சட்டம் என்பது எல்லோராலும் கண்டிக்கப்பட்ட ஒன்று. நீதிபதிகள், அரசியல்வாதிகள் மட்டுமல்லாமல் இந்திய தேசீய காங்கிரஸ் 1936இல் இச்சட்டத்தை கண்டித்தது. நாகரீகம் உள்ள எந்த மனிதனும் இத்தகைய சட்டத்தை ஏற்றுக் கொள்ளமாட்டான் என்று திரு. ராகவய்யா கூறினார்.

நாகப்பா என்ற மற்றொரு சட்டமன்ற உறுப்பினர் காவல்துறையினர் கையில் சிக்கி குற்றப்பரம்பரையினர் பல இன்னல்களுக்கு உள்ளாயினர் என்று கூறியுள்ளார். இவர்கள் தங்கள் சொந்த வேலைகளை செய்ய வேண்டுமானால் இக்குற்றப்பரம்பரையினரை பயன்படுத்தினர். அவர்களுக்கு ஊதியம் எதுவும் கொடுக்காமல் அடிமைகளைப் போல நடத்தினர் என்று கூறுகின்றார்.[3] எனவே, காங்கிரஸ் பேரியக்கம் குற்றப்பரம்பரைச் சட்டத்தை நீக்குவதற்கு

போராடியது. காங்கிரஸ் பிரமுகர் ஜார்ஜ் ஜோசப் என்பவர் குற்றப்பரம்பரைச் சட்டத்தை எதிர்க்க வேண்டுமென்று பல இடங்களில் பொதுக் கூட்டங்களை நடத்தினார். தென் ஆற்காடு மாவட்டத்தில் குற்றப் பரம்பரையினராக அறிவிக்கப்பட்ட படையாச்சிகளும், இச்சட்டத்தை எதிர்த்து வன்னியகுல சத்திரிய சபா என்ற ஒரு அமைப்பை ஏற்படுத்திக்கொண்டு, காங்கிரஸ் கட்சியின் ஆதரவோடு பல போராட்டங்களை நடத்தினர்.[4] அதேபோன்று தென்மாவட்டங்களில் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் 1930-க்குப் பின்னால் கிராமம் கிராமமாகச் சென்று கள்ளர், மறவர் போன்றவர்கள் இந்நாட்டை ஆட்சி செய்தவர்கள், அவர்கள் மீது திணிக்கப்பட்டுள்ள இந்த கருப்புச் சட்டத்தை எதிர்க்க வேண்டுமென்று பிரச்சாரம் செய்தார். 1934இல் அபிராமம் என்ற இடத்தில் மாநாடு ஒன்றைக்கூட்டி குற்றப்பரம்பரைச் சட்டத்தை அரசு வாபஸ் பெற வேண்டுமென்று வலியுறுத்தி தீர்மானம் ஒன்றை நிறைவேற்றினார். பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் முயற்சியால் கூட்டப்பட்ட இம்மாநாட்டிற்கு வரதராஜுலு நாயுடு தலைமையேற்றார். மேலும், இம்மாநாட்டின் முடிவின்படி திரு. வரதராஜுலு நாயுடு தலைமையில் 5பேர் கொண்ட குழு ஒன்று அன்றைய ஆளுநர் முகமது உஸ்மான் என்பவரைச் சந்தித்து ஆப்பநாடு மறவர்கள் மீது திணிக்கப்பட்டுள்ள குற்றப்பரம்பரைச் சட்டத்தை வாபஸ் பெறவேண்டுமென்று வலியுறுத்தினர். வரதராஜுலு நாயுடு தலைமையிலான இக்குழுவில் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர், சசிவர்ணதேவர், பிள்ளையார்குளம்

பெருமாள் தேவர், நவநீதகிருஷ்ண தேவர் ஆகியோர் இருந்தனர். அன்றைய ஆளுநர் அன்றுள்ள சட்ட விதிமுறைப்படி அவர்களுடைய கோரிக்கையை ஏற்க முடியாது என்றும், ஆனால் அவர்களுடைய கோரிக்கையை தலைமை ஆளுநருக்கு பரிசீலனை செய்ய சிபாரிசு செய்து அனுப்புவதாகவும் கூறினார். இதன் விளைவாக 2000 மறவர்கள் மீது திணிக்கப்பட்டிருந்த குற்றப்பரம்பரைச் சட்டம் எண்ணிக்கை குறைந்து 400-ஆக மாற்றப்பட்டது. அன்றைய சட்டம் என்னவென்றால் 1919ஆம் ஆண்டு இந்திய அரசியல் சட்டப்படியும் பின்னர் 1935ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட இந்திய அரசியல் சட்டப்படியும் மலைவாழ் மற்றும் குற்றப்பரம்பரையினர் இனத்தைச் சார்ந்தவர்கள் வாழுகின்ற பகுதியில் நிர்வாகம் செய்யும் அதிகாரம் தலைமை ஆளுநருக்கும், ஆளுநருக்கும் மட்டும்தான் இருந்தது. எனவே, தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கம் நீதிக்கட்சியாக இருந்தாலும் சரி, ராஜாஜி தலைமையிலான காங்கிரஸ் கட்சியாக இருந்தாலும் சரி அதிகாரபூர்வமாக குற்றப்பபரம்பரைச் சட்டத்தில் நேரடியாகக் தலையிட முடியாது.

1936-37 ஆகிய ஆண்டுகளில் மாவட்ட ஆட்சிக்குழு (District Board) விற்கும், சென்னை மாகாண சட்டமன்றத்திற்கும் முறையே தேர்தல் நடைபெறும் காலமக இருந்தது. இவ்வேளையில் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் 1936ஆம் ஆண்டு அக்டோபர் 27ஆம் நாள் அன்றைய இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள பேரையூரில் அரசியல் மாநாடு ஒன்றைக் கூட்டுகின்றார். இது

இந்தியாவில் கூட்டப்பட்ட முதல் கிராம அரசியல் மாநாடாகும். சாதாரணமாக அரசியல் தலைவர்கள் அரசியல் மாநாட்டை நகர்ப்புறங்களில்தான் கூட்டுவார்கள். ஆனால், அகில இந்திய தலைவர்களில் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர்தான் முதன்முதலாக கிராமத்தில் அரசியல் மாநாட்டைக் கூட்டி கிராம மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தினார். இம்மாநாட்டில் பல தீர்மானங்கள் இயற்றப்பட்டன. அதில் ஒரு முக்கிய தீர்மானம் குற்றப் பரம்பரைச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென்பது, இம்மாநாட்டைத் தொடர்ந்து பேரையூர் தாலுகாவிலுள்ள பல ஊர்களில் பொதுக்கூட்டம் நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது. ஆனால் இம்மாநாட்டில் நடைபெற்ற காரசாரமான விவாதங்களை கண்ணுற்ற காவல்துறையினர் அந்த மாநாட்டில் பேசிய பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர், சசிவர்ண தேவர், V.M.S. வேலுச்சாமி நாடார், சுப்பையாபிள்ளை, முருகையாபிள்ளை மற்றும் அதிசயம் பிள்ளை ஆகியவர்கள் மீது வழக்கு தொடுத்ததோடு மட்டுமில்லாமல் 144 தடை உத்தரவும் பிறப்பித்தனர். இவர்கள் எதிர்மனு போட்டு வாதாடியபோது, பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் தவிர மற்ற அனைவரும் வழக்கிலிருந்து விடுவிக்கப்பட்டனர். பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் இந்த மாநாட்டில் புரட்சி உருவாக்கும் நோக்கோடு மக்களின் உணர்வுகளைத் தூண்டி பேசுகிறார் என்று அவர் மீது குற்றவியல் சட்டம் பிரிவு 108 மற்றும் பிரிவு 112ன்படி வழக்கு பதிவு செய்யப்பட்டது. பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் பொதுக்கூட்டங்களில்

பேசக்கூடாது என்று தடைவிதிக்கும் ஆணை பிறப்பிக்கப்பட்டது. இதுபோன்ற ஆணையினை தமிழ்நாட்டில் அவருக்கு விதிக்கப்பட்ட வாய்ப்பூட்டு சட்டம் என்று அழைப்பர். இத்தகைய சட்டமானது இந்திய அரசியல் தலைவர்களில் இருவருக்குத்தான் போடப்பட்டது. அதில் ஒருவர் தேவர், மற்றவர் மராட்டிய மாநில சிங்கம் என போற்றப்பட்ட பாலகங்காதர திலகர்.

1937ஆம் ஆண்டு தேர்தலுக்குப் பின்னர் இவர் ஒவ்வொரு கிராமத்திற்கும் சென்று இந்த குற்றப்பரம்பரைச் சட்டத்தை எதிர்க்க வேண்டும், எதிர்ப்பதோடு அல்லாமல் காவல் நிலையத்திற்கு சென்று கட்டைவிரலில் கைரேகை வைப்பதற்கு பதிலாக அக்கட்டை விரலையே வெட்டிக்கொள் என்று வேகமாக பேசினார். இதையெல்லாம் கண்ணுற்ற ராஜாஜி அரசு அனைத்து மாவட்ட காவல்துறை அதிகாரிகளிடமிருந்தும் குற்றப் பரம்பரைச் சட்டத்தின் செயல்பாடு குறித்த அறிக்கையினை கேட்டது.[5] பல மாவட்ட காவல்துறை அதிகாரிகள் இந்தக் குற்றப்பரம்பரைச் சட்டத்தின் செயல்பாடு பெரிய சீர்திருத்தம் செய்வதாக தோன்றவில்லை. குற்றப்பரம்பரைச் சட்டத்தை மீறியவர்கள் என்ற ஒரு போர்வையில் கீழ்மட்டத்திலுள்ள காவல்துறையினர் குற்றப்பரம்பரையினர் வகுப்பைச் சார்ந்தவர்களை கொடுமைப்படுத்துகின்றனர். கீழ் மட்டத்திலுள்ள காவல்துறை அதிகாரிகள் இச்சட்டத்தை பயன்படுத்தி வசதி படைத்த ஒரு சில குற்றப்பரம்பரையினரிடம் லஞ்சம் பெறவும் வாய்ப்பாக இருக்கின்றது என்று கருத்துத் தெரிவித்தனர். இருப்பினும்

ஒருசில மாவட்ட காவல்துறை அதிகாரிகள் குற்றப்பரம்பரைச் சட்டத்தின் கீழுள்ள சமுதாயத்தில் உள்ள உறுப்பினர்கள பலரை இச்சட்டத்தின் மூலம்தான் கட்டுப்படுத்தமுடியும் என்றும் கருத்து தெரிவித்தனர். ஆனால் இது குறித்து 1939ஆம் ஆண்டு இரண்டாம் உலகப்போரின் விளைவால் அமைச்சரவை கலைக்கப்பட்ட காரணத்தால் இராஜாஜி அமைச்சரவை எந்தவித முடிவையும் எடுக்க முடியவில்லை. 1937ஆம் ஆண்டு தேர்தலில் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் சென்னை மாகாண சட்டமன்ற உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்டார். சட்டமன்ற உறுப்பினர் என்ற முறையில் சட்டமன்றத்திலும், மதுரை, இராமநாதபுரம் போன்ற தென் மாவட்டங்களிலும் உள்ள பல கிராமங்களில் சென்று குற்றப்பரம்பரைச் சட்ட எதிர்ப்பு பிரச்சாரங்களைச் செய்து வந்தார். உசிலம்பட்டியில் 1939ஆம் ஆண்டு மதுரை மாவட்ட கள்ளர் இளைஞர் மாநாடு ஒன்றைக் கூட்டினார். இந்த மாநாட்டில் தேவர் பேசும்போது குற்றப்பரம்பரைச் சட்டமானது இந்தியாவிலுள்ள வீரமிக்க மராத்தியர்கள், சீக்கியர்கள், மார்வாரியர்கள் ஆகியவர் மீது புகுத்தப்பட்டுள்ளது. இதே போன்று சென்னை மாகாணத்தில் வீரம் செறிந்த கள்ளர்கள், மறவர்கள் மீதும் புகுத்தப்பட்டுள்ளது. இது ஆங்கிலேயர்கள் தங்களின் எதிரிகளாகிய வீரமிக்க இம்மண்ணின் மைந்தர்களை அடக்குவதற்காக கொண்டு வரப்பட்ட சட்டமாகும். எனவே இச்சட்டத்தை வாபஸ் பெறுவதன் மூலமாகத்தான் இம்மக்களுக்கு விடுதலை கிடைக்கும் என்றும் கூறுகின்றார்.

சென்னை மாகாண பிரதமரான சி.இராஜகோபாலாச்சாரியார் மதுரை வரும் வேளையில் 1,00,000 பிரமலைக் கள்ளர்கள் ஒன்று சேர்ந்து குற்றப்பரம்பரை சட்டத்திற்கு எதிராக ஊர்வலம் ஒன்றை நடத்தினார்கள். ஊர்வலத்தின் முடிவில் மனு ஒன்றை பிரதமரிடம் கொடுத்தார்கள். ஆனால் பலன் ஒன்றும் இல்லை. காரணம் 1935ஆம் ஆண்டு அரசியல் அமைப்பு சட்டத்தின்படி குற்றப்பரம்பரையினர் போன்ற மலைவாழ்மக்கள் பற்றிய நிர்வாக பொறுப்பு தலைமை ஆளுநர் அல்லது ஆளுநர் அதிகாரத்திற்கு உட்பட்ட ஒதுக்கப்பட்ட துறையில் (Reserved Subject) இருந்தது. மேலும் இராஜாஜி உசிலம்பட்டி வட்டாரங்களில் ஜல்லிக்கட்டு எவ்வாறு நடக்கிறது என்பதை ஆளுநர் காண்பதற்கு ஏற்பாடு செய்து இருந்தார். பிரமலைக் கள்ளர் வாழும் உசிலம்பட்டி பகுதியில் நடைபெறும் ஜல்லிக்கட்டு ஒரு பாரம்பரியமிக்க வீரவிளையாட்டு. இதில் பிரமலைக்கள்ளர்கள் பங்குகொண்டு அடக்கமுடியாத காளைகளையும் அடக்குவர். இவ்வீர விளையாட்டில் பங்குபெற்று தங்களுடைய முரட்டுக் குணத்தை வெளிப்படுத்தும் பிரமலைக்கள்ளர்களை பார்த்தால் சென்னை மாகாண ஆளுனர் குற்றப்பரம்பரைச் சட்டம் இவர்கள் மீது திணிக்கப்பட்டது சரி என்ற முடிவிற்கு வந்துவிடுவாரோ என்ற அச்சம் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவருக்கு வந்தது. எனவே, பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் பிரமலைக் கள்ளர்களை ஜல்லிக்கட்டை புறக்கணிக்குமாறு ஒரு சிறு துண்டு

பிரசுரத்தை அச்சிட்டு அனைவருக்கும் தெரியப்படுத்தினார். ஆளுநர் வந்து பார்த்தபொழுது இங்கு ஜல்லிக்கட்டு நிகழ்ச்சி இல்லை. ஆளுநருக்கு ஒரே ஆச்சரியம். காரணத்தைத் தெரிந்து கொண்ட ஆளுநர் பசும்பொன் முத்துராமலிங்கத்தேவரின் செல்வாக்கைக் கண்டு ஆச்சரியப்பட்டார்.

பல தலைவர்கள் இக்குற்றப்பரம்பரைச் சட்டத்திற்கு எதிராக புரட்சி செய்ததன் விளைவாக 1947ஆம் ஆண்டு இச்சட்டம் ரத்து செய்யப்பட்டது. அதன் விவரம் வருமாறு. 1946ஆம் ஆண்டு மாகாண சட்டமன்றத்திற்கு தேர்தல் நடைபெற்றது. இத்தேர்தலில் 215 சட்டமன்ற தொகுதிகளில் 165 இடங்களை காங்கிரஸ் கட்சி பிடித்தது. இச்சட்டமன்றத்தில் முஸ்லீம்லீக் கட்சி எதிர்கட்சியாக இருந்தது.

இச்சட்டமன்றத்தில் 1924-ஆம் ஆண்டு குற்றப்பரம்பரைச் சட்டத்தில் இருந்து சென்னை மாகாணத்தை விலக்கிக் கொள்ளும் தீர்மானத்தை உள்துறை அமைச்சர் Dr. பி. சுப்பராயன் 1946ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஒரு மசோதா ஒன்றை அறிமுகப்படுத்தினார். இந்த மசோதா பற்றி ஆளுங்கட்சி, எதிர்கட்சி என்ற பாகுபாடு இல்லாமல் குற்றப்பரம்பரைச் சட்டத்திற்கு உட்பட்ட ஜாதிகள், உட்படாத ஜாதிகள் என்று வேறுபாடுன்றி அனைத்து தரப்பு சட்டமன்ற உறுப்பினர்களும் குற்றப்பரம்பரை சட்டம் 1911இல் கொண்டு வந்ததையும் அதன் திருத்தச் சட்டம் 1924இல் கொண்டு வந்ததையும்

அதன் செயல்பாடுகளையும் வன்மையாக கண்டித்து மசோதா சட்டமாக நிறைவேற ஒருமனதாக தீர்மானித்தனர். அதன்படி இச்சட்டம் 1947ஆம் ஆண்டு மே மாதம் 30ம் தேதி தலைமை ஆளுனரின் ஒப்புதல் பெறப்பட்டது. அவ்வாறு ஒப்புதல் பெறப்பட்ட இச்சட்டம் 1947ஆம் ஆண்டு ஜூன் மாதம் 5 முதல் அமலுக்கு வந்தது. இம்மசோதா குறித்து பல உறுப்பினர்கள் கூறிய கருத்துக்களை இங்கு பார்ப்போம்.

குற்றப்பரம்பரைச் சட்டத்தில் இருந்து சென்னை மாகாணத்தை விடுவிக்கும் தீர்மானத்தின் மீது நடந்த விவாதத்தில் முஸ்லீம்லீக் கட்சியின் உறுப்பினரான பேகம் சுல்தான் மீர் அமுர்தின் கூறும்போது, "முஸ்லீம் லீக் கட்சியில் உள்ள உறுப்பினர்கள் குறிப்பாக பெண் உறுப்பினராகிய நான் மனிதாபிமான அடிப்படையில் கூறுகிறேன். இந்த குற்றப் பரம்பரைச் சட்டமானது நாகரிகமான நாட்டில் உள்ள சட்ட புத்தகத்தில் எழுதப்பட்ட ஒரு கரும்புள்ளி ஆகும். காவல் துறையினரால் இம்மக்கள் மிகவும் கடுமையான இன்னல்களுக்கு ஆளானார்கள். எனவே இச்சட்டத்தை நீக்குவது அவசியமாகும்."[6] சட்டமன்ற உறுப்பினர் R.V.சுவாமிநாதன் பேசுகிறபோது நாட்டில் உள்ள பிராமணர்கள் உள்ளிட்ட அனைத்து ஜாதியிலும் குற்றவாளிகள் உள்ளனர். அப்படி இருக்க சில குறிப்பிட்ட ஜாதிகளில் மட்டும் குறிப்பாக வீரமிக்க ஜாதிகளில் மட்டும் ஏன் இத்தகைய சட்டத்தை புகுத்தினார்கள். பிரிட்டிஷ் அரசு, அவர்களுடைய ஆட்சியைத் தூக்கி எறியும் என்று அஞ்சிய

சில தீவிர ஜாதிகளை கட்டுப்படுத்தவே இச்சட்டத்தை அமுல்படுத்தினர் என்று கூறினார்.

திரு. வி.இ. முனியசாமி என்பவர் இம்மசோதாவை ஆதரித்து பேசும்போது தென் ஆற்காடு மாவட்டம் அஜிஸ் நகரில் உள்ள ஆதிதிராவிடர்களுக்கான சீர்திருத்த முகாமில் (Settlement) உள்ள நந்தனார் உயர்நிலைப் பள்ளியில் பயிலும் மாணவர்கள் ஏனைய மாணவர்களுக்கு சமமான வசதிகளையும், சலுகைகளையும் அனுபவிக்க முடியவில்லை. காரணம், இவர்கள் இக்குற்றப் பரம்பரைச் சட்டத்திற்குட்பட்ட ஆதிதிராவிட மாணவர்களாக இருந்தமையால்தான் என்று கூறினார். அதோடு தென் ஆற்காடு மாவட்டத்தில் நடைபெற்ற பல மாநாடுகளில் ஆதிதிராவிட உறுப்பினர்கள் இச்சட்டத்தை நீக்க வேண்டும் என்று குரல் கொடுத்து உள்ளனர் என்று கூறினார். உறுபினர் திரு. இராஜராம் நாயுடு பேசும் போது பல ஆண்டுகளுக்கு முன்னரே இச்சட்டத்தை நீக்கி இருக்க வேண்டும். 1938ஆம் ஆண்டு சுகாதார துறை அமைச்சராகவும், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவராகவும் இருந்த திருமதி. ருக்குமணி லட்சுமிபதி என்பவர் மாகாண சட்டமன்றத்தில் குற்றப்பரம்பரைச் சட்டத்தை நீக்க தீர்மானம் ஒன்றை கொண்டு வந்தார். என்ன காரணத்திற்காகவோ அது நிறைவேறாமல் போய்விட்டது. இப்பொழுது இச்சட்டத்தை நீக்குவதற்கு கொண்டுவரப்படும் இம்மசோதாவை பாராட்டுகிறேன், வரவேற்கிறேன் என்று கூறினார்.

சட்டமன்ற உறுப்பினர் திரு. எம்.எஸ்.பட்டாபிராம ஐயர் என்பவர் குற்றப்பரம்பரைச் சட்டம் என்பது பிரிட்டிஷ் ஆதிக்க அரசு தங்களுடைய அதிகாரத்தை பலப்படுத்திக்கொள்ள கொண்டு வரப்பட்ட ஒரு அரசியல் ஆயுதம் என்று கூறுகின்றார். திரு. S.A.F. இப்ராகிம் சாகிப் என்பவர் கூறும்போது குற்றப்பரம்பரையில் கூறப்பட்டுள்ள ஜாதிகளை விட மிகவும் மோசமான குற்றவாளிகள் பல ஜாதியில் உள்ளனர். அவர்களை எல்லாம் நாம் நிரூபிக்க முடியாது. வியாபாரத்தில் உள்ளவர்கள் கருப்பு சந்தையில் ஈடுபடுகிறார்கள். அரசு அதிகாரிகள் லஞ்சம் பெறுகின்றனர். ஆனால் அவர்கள் எல்லாம் தப்பித்து விடுகின்றார்கள். ஏனென்றால் அவர்கள் எல்லாம் செல்வந்தர்கள். ஆனால் குற்றப்பரம்பரையின் பிடியில் உள்ள ஜாதியினர் ஏழைகள். அவர்களில் ஒரு சிலர் அங்கும் இங்கும் சில தவறுகள் செய்கின்றார்கள். அவர்கள் தங்களுடைய வாழ்க்கைக்காகத் தவறுகள் செய்கின்றனர். ஆனால் கருப்பு சந்தைக்காரர்களும், லஞ்சம் பெறுபவர்களும் தினம் தினம் இத்தகைய குற்றங்களை செய்து வந்தாலும் அவர்களை குற்றவாளிகள் என்று கூறுவது இல்லை.

திரு. N. ரெங்கா ரெட்டி என்ற மற்றொரு உறுப்பினர் பேசும்போது இச்சட்டம் தனி மனிதனின் உரிமையைப் பறித்து உள்ளது. இச்சட்டத்தைப் பயன்படுத்தி காவல்துறையினர் தங்கள் விருப்பத்தின் பேரில் செயல்பட்டார்கள். கடப்பா மாவட்டத்தில் பல சொத்துகளுக்கு அதிபதியாகவும் சமுதாயத்தில் அந்தஸ்துடனும் விளங்கிய மிகவும் பலம் பொருந்திய

ரெட்டியார்களும்கூட இச்சட்டத்தின் கீழ் கொண்டு வரப்பட்டனர்.

குற்றப்பரம்பரைச் சட்டத்தை நீக்கும் மசோதாவை ஆதரிக்கும் இதே வேளையில் அச்சட்டத்தின் மூலம் கொண்டு வரப்பட்ட சீர்திருத்த நடவடிக்கைகளை நீக்கிவிடக் கூடாது என்ற ஒரு நிபந்தனையும் முன்வைத்தனர். அவர்களில் முக்கியமானவர் உறுப்பினர் திரு.ஆர்.வி.சுவாமிநாதன், திரு V.I. முனியசாமி பிள்ளை, திரு. இராஜாராம் நாயுடு முதலியோர் ஆவர். திரு.R.V சுவாமிநாதன் பேசும்போது மதுரை மாவட்டத்தில் உள்ள கள்ளர்களின் சீரமைப்பிற்காக உருவாக்கப்பட்ட கள்ளர் சீரமைப்புத் துறையை, தொடர்ந்து அரசு வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் அதே வேளையில் இத்துறையை நிர்வகிக்கும் பொறுப்பு காவல் துறையிடமிருந்து கல்வித்துறைக்கு மாற்றப்பட வேண்டும் என்றும் வேண்டுகோள் விடுத்தார். திரு. ராஜாராம் நாயுடு என்பவரும் கள்ளர் சீரமைப்புத் துறையை காவல் துறையிலிருந்து விடுவித்துக் கல்வித்துறை தான் நிர்வகிக்க வேண்டும் என்று வலியுறுத்தியுள்ளார். ஆதிதிராவிட உறுப்பினரான V.I. முனியசாமி பிள்ளை திரு.R.V சுவாமிநாதன் கூறிய கருத்துக்களை வரவேற்றதோடு தென் ஆற்காடு மாவட்டத்தில் உள்ள அஜிஸ் நகர் சீரமைப்பு முகாமை இன்னும் சில ஆண்டுகளுக்கு ஆதிதிராவிடர் குழந்தைகள் நலன் கருதி நீடிக்க செய்ய வேண்டும் என்றும்; அஜிஸ் நகர் சீரமைப்பு முகாமை நிர்வகிக்கும் பொறுப்பை

கல்வித்துறையிடமே விடவேண்டும் என்றும் வேண்டுகோள் விடுத்தார்.

எனவே 1920ஆம் ஆண்டு பெருங்காமநல்லூரில் நடைபெற்ற மக்கள் போர் என்ன காரணத்திற்காக நடைபெற்றதோ அது உண்மை என்பது 1947ஆம் ஆண்டு நடைபெற்ற சட்டமன்றத்தில் பேசிய அனைத்து தரப்பு மற்றும் அனைத்து அரசியல் கட்சியையும் சார்ந்த உறுப்பினர்கள் பேசிய பேச்சுக்களின் மூலமாக தெரிய வருகிறது. எனவே பெருங்காமநல்லூர் கலவரம் என்பது இந்திய விடுதலைப் போராட்டத்தில் நடைபெற்ற பல நிகழ்வுகளில் மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்று என்பது தெளிவு.

## NOTES

1. Muthu Thevar, P. **Muvendarkula Thevar Samuha Varalaru (T),** Madurai, 1975, p. 443.
2. David Arnold, **Police Power and Colonial Rule, Madras 1859-1947**, Oxford University Press, Madras, 1986, p.144.
3. Madras Legislative Assembly Debates, March-April, 1947, p.554.
4. 4. David Arnold, **op.cit.,** p. 205.
5. Memorandum No. 10563, C-1, dated 13.9.1937.
6. Madras Legislative Assembly Debates, dated 17 April 1947, p.16.

## பாகம் 5

## முடிவுரை

1920இல் நடைபெற்ற இப்பெருங்காமநல்லூர் கலவரம் சாதாரண கலவரம் என்றோ, அல்லது ஒரு குறிப்பிட்ட சாதியினரின் உரிமைக்காகச் செய்த போர் என்றோ சொல்ல முடியாது. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில், குறிப்பாக முதல் உலகப்போருக்குப் பின் இந்திய மக்கள் மீது, ஆங்கிலேயர்கள் தொடுத்த பல அடக்குமுறைச் சட்டங்களுக்கு எதிராக எழுந்த பல நிகழ்ச்சிகளில் மிகவும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். இந்நிகழ்ச்சி ரௌலட் (Rowlatt Act) சட்டத்திற்கு எதிராக எழுந்த ஜாலியன்வாலாபாக் படுகொலை போன்ற நிகழ்ச்சியின் தொடர்ச்சியே.

எல்லாச் சாதியிலும் குற்றவாளிகள் உள்ளனர். நல்லவர்களும் உள்ளனர். குற்றவாளிகளை அடக்குவதற்கு, இந்தியத் தண்டனைச் சட்டம் போன்ற பல சட்டங்கள் இருக்கின்றன. அவற்றை வைத்தே குற்றப்பரம்பரைச் சட்டத்திற்குட்பட்ட பல சாதியினரில் உள்ள சில குற்றவாளிகளைத் தண்டிக்க முடியும். அப்படியிருக்க, சில குறிப்பிட்ட சாதிகள் மீது மட்டும் குற்றப்பரம்பரைச் சட்டத்தை அமுல்படுத்தியது அரசியல் உள்நோக்கம் கொண்ட ஒரு செயலாகும். எனவே இச்சட்டம் கொண்டு வந்த காலத்திலேயே காங்கிரஸ் கட்சியில் உள்ள பலர் இச்சட்டத்தை எதிர்த்தனர். குறிப்பாக மதுரை மாவட்டத்தில்

ஜார்ஜ் ஜோசப் போன்ற காங்கிரஸ் பிரமுகர்கள், இச்சட்டத்தை எதிர்த்துள்ளனர். கள்ளர் நாட்டில் பல பொதுக் கூட்டங்கள் நடத்தி எதிர்ப்பினைக் காட்டியுள்ளனர். இக்கலவரம், வயல் வெளியில் நடைபெற்ற காரணத்தாலும், துப்பாக்கி போன்ற நவீன ஆயுதங்கள் கள்ளர்களிடம் இல்லாத காரணத்தாலும் உயிர்ச் சேதம் அதிகம் ஏற்படவில்லை. ஆனால் இவ்வெதிர்ப்பு திட்டமிட்டுச் செய்யப்பட்ட மக்கள் இயக்கமாகும். எனவே தேசிய இயக்கத்தில் இது ஒரு முக்கிய அங்கமாகும். எனவே தேசிய இயக்கத்தில் பங்கு பெற்ற இன்னல்களுக்கு உட்பட்ட போராட்ட வீரர்களுக்கான தியாகிகள் என்ற அந்தஸ்தை பெருங்காமநல்லூர் கலவரத்தில் ஈடுபட்டு இறந்தவர்களுக்கு அளித்து தியாகிகள் என்ற அங்கீகாரத்தை வழங்கவேண்டும். தியாகிகள் வாரிசுகளுக்கு மருத்துவம், பொறியியல் படிப்புகளில் இட ஒதுக்கீடு போன்ற சலுகைகளை வழங்கவேண்டும்.

மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் உள்ள குற்றப் பரம்பரையினர் சாதிகளை தனியாகப் பிரித்து M.B.C. மற்றும் O.B.C.களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள இட ஒதுக்கீட்டில், தனி இடஒதுக்கீடு வழங்க முடியுமா? என்று ஆராய்வது சாலச்சிறந்தது.

இவர்கள் எந்த அளவிற்கு இன்னலுக்கு உள்ளாக்கப் பட்டனர் என்பது, இச்சட்டத்தை ரத்து செய்யும்போது கொண்டு வரப்பட்ட மசோதா மீது சென்னை மாகாண சட்டமன்ற உறுப்பினர்கள் பேசிய பேச்சிலிருந்து அறிய

முடிகிறது. 1939ஆம் ஆண்டு கொடுக்கப்பட்டுள்ள குற்றப்பரம்பரைச் சாதியினர் மற்றும் அவர்களது தொழில் சம்மந்தமாக கொடுக்கப்பட்டுள்ள பட்டியலில், பிரமலைக் கள்ளர்களின் தொழிலைப் பற்றி குறிப்பிடும்போது, அவர்கள் திருடர்கள் என்று கூறப்படாதது குறிப்பிடத்தக்கது (See Appendix III, Serial No.68). எனவே பெருங்காமநல்லூர் பிரமலைக் கள்ளர்கள் செய்த போர் ஒரு விடுதலைப் போராகும். அவர்களுக்கு வீரவணக்கம் செய்வதும், மரியாதை செலுத்துவதும் நம் கடமையாகும். அப்போரில் வீர மரணமடைந்த தியாகிகளுக்கு பெருங்காமநல்லூரில் எழுப்பப்பட்டுள்ள நினைவுத் தூண், நாம் அவர்களுக்கு செலுத்தும் நன்றிக் கடனே. மேலும், அம்மக்களுக்கு நாம் செலுத்தும் மற்றொரு நன்றிக் கடன் மத்திய அரசு வெளியிடும் தபால் தலையில் பெருங்காமநல்லூர் நினைவுத் தூணை பொறித்து அத் தியாகிகள் நினைவைப் போற்ற வேண்டும்.

வாழ்க பெருங்காமநல்லூர் மக்கள். வளர்க அவர்கள் தேசிய உணர்வு.

## அட்டைப்பட விளக்கம்

"இந்திய விடுதலைப் போராட்டத்தில் பெருங்காமநல்லூர்" என்னும் தலைப்பிற்கேற்ப இந்திய வரைபடமும், பெருங்காமநல்லூரில் கலவரத்தில் இறந்த தியாகிகளுக்கு நினைவுச்சின்னமாக எழுப்பப்பட்டுள்ள தூணும் அட்டைப்படத்தில் அடையாளமாக அமைக்கப்பட்டடுள்ளது. (not drawn to scale)

# SELECT BIBLIOGRAPHY


1. G.O. No.1023, Home (Judicial), dated 10.5.1914.
2. G.O. No.2223, Home (Judicial), dated 16.9.1915.
3. G.O. No.1331, Home (Judicial), dated 5.6.1918.
4. Memorandam No.10563 C-1, dated 13.9.1937.
5. Madras Legislative Assembly Debates, March–April, 1947.
6. **Desaphakthan** (MNNR), Madras, dated 17.5.1920.
7. Aggarwala, R.C., **Constitutional History of India and National Movement**, 5th Edition, S. Chand & Co., Ltd., New Delhi, 1981.
8. Bose, K., **Forward Bloc**, Tamilnadu Academy of Political Science, Madras, 1988.
9. David Arnold, **Police Power and Colonial Rule, Madras 1859-1947,** Oxford University Press, Madras, 1986.
10. Edgar Thurston, **Castes and Tribes of Southern India**, (Seven Volumes), Asian Educational Service, Madras, 1993.
11. Muthu Thevar, P., **Muvendarkula Thevar Samuha Varalaru (T.)** (A Social History of Thevar), Kakkuveeran Publishers, Madurai, 1975.
12. Perumal, A.R., **Mudisoodamannar Pasumpon Muthuramalinga Thevar Veera Varalaru**, Pasumpon, 1993.
13. Published under the I.G. of Police (Ed.,) **History of Madras Police Centenary 1859-1959**, Madras, 1957.

# APPENDIX I

## PADDISON REPORT*

Letter - From G.F. Paddison, Esq., M.A.,
District Magistrate of Madura.

To - The Secretary to Government Home
(Judicial) Dept.

Dated - The 27th April 1918.

I have the honour to invite the attention of Government to the Hon'ble Mr.Knapp's letter written while District Magistrate of Madura R.Dis No.29 – Mgl. dated the 8th April 1914, in regard to the proclamation of a section of the Kallar of this district as a criminal tribe. The particular section of the Kallar who were then proclaimed were the Kallars of Kilagudi, but as he pointed out, it was intended to deal similarly with other sections of the tribe. Since then the Act has been extended to the Kallars of Mela Urappanur and Pusalapuram in G.O. No. 2233, Judicial, dated the 16th September 1915. It is unnecessary I submit, for me to dilate at length on the criminal propensities of the Kallar. They are referred to in para 2 of Mr.Knapp's letter quoted above and the District Gazetteer of Madura, Mr. Thurston's Castes and Tribes of Southern India, Mr. Mullalay's Criminal Classes. Theft, not their chief occupation, is, at all events, their

principal recreation and theft with them is apt to take the form of cattle theft which is the most irritating and most disastrous form of loss to the ordinary ryot population of this and the neighbouring districts. In past years, many attempt has been made to wean the Kallars from their hereditary practice. There was a special police party in this district for sometimes, a special first-class magistrate to deal with under the security sections. Special efforts were made to form co-operative societies in the Kallarnad, Kallars have been given special preference under the darkhast rules, voluntary settlement has been started for them at Gudalur, and special efforts are being made to recruit them for the army, though so far with but little success.

2. My main object in dealing with the Kallar in this district has been to induce them to give up theft of their own accord. This was done in Melur by Kilnad Kallars and what can be done in the Kilnad can certainly be done in the Melnad among what are called the Piramalai Kallars, if the Kallar so choose. When I first came to the district, I pointed out to them the discomforts of the C.T. Act and warned them that the Act would be extended to other villages, if they did not make a substantial effort to reform themselves. A few isolated panchayats were started but it was found that they were used as means of suppressing the reporting of crimes rather than of preventing its concurrence (or) bringing it to the notice of the authorities.

3. The result of the application of the Act as far as it has gone, has been satisfactory. In the first place, it has confined the operations of the registered Kallar to petty crimes in the neighbourhood of their villages. Secondly, it is acting as a reforming influence as the kallar are within the Act and as it is possible thereunder to check the Kallars who are in the habit of spending their nights away; there is a distinct inducement for the Kallars to stay at home and thus by their continued good conduct to earn cancellation of registration. I have already removed the names of a number of persons from the register and hope that the number will increase. The number of Kallar affected by the present registration is however very small and the effect upon the general problem has not been great. Cattle-theft and theft of all sort is still rampant and the Piramalai Kallar have not as yet shown a disposition to follow in the footsteps of their Kilnad neighbours. The great hope lies in the fact the Kallars have a strong dislike to the Act being applied to their villages; and if it is really brought home to them that, unless they make an honest effort to improve, the Act will be more widely extended, I hope and believe it may be possible to induce them to take measures for themselves. At present they know that the Act can only be applied after a laborious collection of statistics to particular villages by a special proclamation and consider it worth their while to take the risk of their villages being not one of those chosen.

4. I propose therefore after consultation with the police authorities that the whole of the Piramalai Kallar should be proclaimed a criminal tribe. Of their criminality, as I showed above, there can be no doubt. As far as figures are concerned, the DSP has given me a list which shows over 1800 previous convictions of non-bailable offences; but as have been noted by all who know the Kallar system this does not represent a tenth of the crime which they commit. A pair of bullocks are stolen; unless the thieves are captured that right red-handed, the cattle are far away next morning; an offer is made through a third party to restore the bulls on payment of tuppukuli (or) blackmail. The man knows that, if he does not pay, he will never see his cattle again. So, in nine cases out of ten on promise of recovery, he pays the money and his cattle returned. If he then reports the matter to the police, it is extremely probable that his risks will be burned down. It is this infamous system which has to be broken down.

5. Although, I would recommend that the whole tribe be notified, I would not propose that they should all be registered. At all events none but adult males should be brought under the Act. Though the application of the Act is held over all villages, it would only be applied village by village to those which refused to reform and any village which by sending a number of recruits to the army (or) of coolies to a labour corps showed its readiness to induce its

younger members to lead an honest life need have no fear of the application of the Act. The register will have to be kept open for longer than the usual period, in order that the villages may be dealt with one by one and I request that orders to that effect may be passed. This general application of the Act to the Piramalai Kallars would also have a good effect indirectly on the Gudalur criminal settlement where there are 1800 acres of land for the Kallar who want them. There would be no difficulty in filling up the settlement in a few months with Kallars, but unfortunately the leaders in crime are not anxious to go where they know they will be watched. If they know that their movements would be watched in their villages, they would be ready to go to the settlements where an effort could be made to reform them.

---

* G.O. No.1331, Home (Judicial), dated 5.6.1918.

## APPENDIX II

## NOTIFICATION*

The following notification will be published in the Fort St. George Gazette:-

Whereas there is reason to believe that the section of the tribe of Kallar generally known as the Piramalai Kallar, in the Thirumangalam taluk of the Madura district, is addicted to the systematic commission of non-bailable offences, the Governor in Council, in exercise of the powers conferred on him by section 3 of the C.T. Act 1911 (III of 1911), hereby declares that the said Piramalai Kallar to be a criminal tribe for the purpose of the said Act.

Under Section 10 of the said Act, the Governor in Council further directs that every registered member of the said criminal tribe shall, in the prescribed manner report himself at fixed and notify his place of residence and any change (or) intended change of residence and any absence (or) intended absence from his residence.

2. Under Section 4 of the Criminal Tribes Act, 1911, the Government direct the District Magistrate of Madurai to make a cause to be made register of the members of the criminal tribe notified above within the limits of the Madura district.

---

* G.O. No.1331, Home (Judicial), dated 5.6.1918.

# APPENDIX III

## MEANS OF LIVELIHOOD AND ECONOMIC CONDITION OF EACH TRIBE*

| No. | Name of the Tribe | Means of livelihood | Economic Condition |
|---|---|---|---|
| 1. | Telaga Pamulas | Sooth-saying, selling mats, catching fish and birds, cooly, tattooing, cultivation (in Anantapur), begging, snake-charming, basket-making, rearing pigs, sorcery & illicit distillation of arrack | Poor |
| 2. | Konda Doras | Cooly, cultivation, selling of honey, fuel and medical herbs | Poor |
| 3. | Rellis | Fruit and vegetable selling | -do- |
| 4. | Paidis | Cooly, cultivation and begging | -do- |
| 5. | Kintali Kalingas | Cooly, cultivation and begging | Moderate |
| 6. | Donga Yatas | Basket making, Cooly and begging | Poor |
| 7. | Dandasis | Cooly, Cultivation and begging | -do- |
| 8. | Donga Yenetis | -do- | -do- |
| 9. | Munda Pottas | Begging | -do- |
| 10. | Audiniya Dombs | Cooly | -do- |

| No. | Name of the Tribe | Means of livelihood | Economic Condition |
|---|---|---|---|
| 11. | Oriya Dombs | | |
| 12. | Ghasis | -do- | -do- |
| 13. | Nakkalas | Cooly, Cultivation, Catching Fish and Birds and Selling Pigs | Normal |
| 14. | (Anipey) Malas | Cooly and Cultivation | Fair |
| 15. | (Donga) Yerakalas | Catching birds, making baskets and mats and rearing pigs, rope making, cultivation, storing and selling pig manure & fortune – telling | Poor |
| 16. | Dommaras | Cooly work, rearing and selling pigs, rope – dancing, exhibiting acrobatic feats, mat making, selling combs and begging | Very Poor |
| 17. | Reddikas | Cooly work and driving bullock-bandies | Generally Poor |
| 18. | (Donga) Woddars | Earth work, cutting stones, Cooly work, house – building, masonary, field-labour and brick-laying. | Very Poor |
| 19. | (Donga) Lambadis | Weaving gunny clothes and making sacs, cultivation & cattle-tending | Poor |
| 20. | (Donga) Yenadies | Fishing, village watching, cooly, honey-gathering, domestic service, farming, wood-cutting, catching-snakes, and selling skins | -do- |

| No. | Name of the Tribe | Means of livelihood | Economic Condition |
|---|---|---|---|
| 21. | (Donga) Dasaris | Begging, coolly & agriculture | -do- |
| 22. | Nizam Woddars | Earth-work | -do- |
| 23. | Kepmaris | Cooly, pick-pocketing | Fair |
| 24. | Jogulas or Jogis | Breeding pigs, snake charming, begging, scavenging and labour | -do- |
| 25. | Jaruguballi madigas | Shoe-making and cooly | --- |
| 26. | Chakkala and Pamulas | Begging and snake-charming | --- |
| 27. | Korachas | Rope, basket and thatty making, and pig rearing | Poor |
| 28. | Boyas | Cooly, toddy-tapping, fruit and vegetables selling, wood-cutting, agriculture and cattle lifting | --- |
| 29. | Anneboyinapalle Malas | Agricultural and miscellaneous labourers | Fairly satisfactory |
| 30. | Mutharachas | -do- | --- |
| 31. | Nirshikaris | Hunting, catching birds, and begging | Very poor |
| 32. | Sugalis | Cooly, cultivation, cattle-lifting, selling firewood, lime-stone burning & cattle-tending. Fair | Fairly satisfactory |

| No. | Name of the Tribe | Means of livelihood | Economic Condition |
|---|---|---|---|
| 33. | Malas and Madigas | Weaving, Cooly and cultivation | Fair |
| 34. | Kanjar Bhats | .(Nomadic) | --- |
| 35. | Thottia Naicks | (Wandering tribe) catching birds, rearing pigs, sweepers and scavengers | Poor |
| 36. | Hired Assasisn | Cooly and cultivation | --- |
| 37. | Mondi-vogulas | --- | --- |
| 38. | Rudrapad Korachas | Cooly and cultivation | Fairly satisfactory |
| 39. | Picharis | Cooly, cultivation, catching birds, hares and bears and begging | Poor |
| 40. | (Donga) Ur. Korachas | Rope & basket making, pig rearing and cultivation | -do- |
| 41. | Jutur mixed gang | Cooly, begging and cultivation | -do- |
| 42. | Pedda Boyas | Cooly, cultivation, servants of ryots | -do- |
| 43. | Dabbala Korachas | Rope and basket making and pig rearing | -do- |
| 44. | Pitchiguntlas | Cooly and cultivation | --- |
| 45. | Devagudi Talayaris | Cooly, cultivation and weaving | --- |
| 46. | Venganur Parayas | Cultivation, Cooly and digging wells | Poor |

| No. | Name of the Tribe | Means of livelihood | Economic Condition |
|---|---|---|---|
| 47. | Nattam Korachas | Basket Making, Cultivation and cooly | --- |
| 48. | Amagunta Poligars | Cultivation and Cooly | --- |
| 49. | Bhattu Turkas | Cooly and cultivation | --- |
| 50. | Uppu Koravars | Bartering salt for grain and selling ropes and leaves & cultivation | Satisfactory |
| 51. | Salem Melurnad Koravars | Cooly work, Basket making, Pinning Coconut leaves, Cultivation, Cot-making, Rope-making & Tree-tapping | Poor |
| 52. | Sakkaraitha-madai Koravars | Bartering salt for grains, selling leaves, cultivation and cooly | --- |
| 53. | Irulars | Cooly work, cultivation, catching rats, fuel cutting, watching in thopes, collecting forest produce and begging. | Poor |
| 54. | (Kal) Oddars | Stone working, making ropes, mats and baskets, digging wells and road work. | --- |
| 55. | Ponnai Koravars | Bartering salt for grains, selling leaves and rickshaw pulling | --- |
| 56. | Chengampundi Koravars | Basket and window making | Poor |
| 57. | Sengunam Poligars | Cutting fuel in forests, and agriculture | --- |

| No. | Name of the Tribe | Means of livelihood | Economic Condition |
|---|---|---|---|
| 58. | Nokkars | Tinkering, cooly work and begging | --- |
| 59. | Adi – Dravidas | Agricultural cooly work | --- |
| 60. | Koravars | Basket making, selling curry leaves & rickshaw pulling | --- |
| 61. | Veppur Adi-Dravidars | Cultivation & cooly | Fair |
| 62. | Attur Kilnad Koravars | Cooly work, cultivation, basket-pinning and watching | -do- |
| 63. | Thalli Koravars | Cultivation and cooly work | --- |
| 64. | Saragapalli Koravars | Cultivation and cooly work | --- |
| 65. | Monda Koravars | -do- | --- |
| 66. | Sooramarai Oddars | Digging wells and building mud-walls | --- |
| 67. | Vaduvarpatti Koravars | Scavenging, sweeping, rearing pigs, basket-making, cooly work, tattooing and ear-boring. | Poor |
| 68. | Piramalai Kallars | Agriculture. Cooly work and cattle tending | -do- |
| 69. | Valayars | Cooly, weaving, selling fuel, basket-making & cultivation | -do- |
| 70. | Chettinad Valayars | Cooly work | -do- |
| 71. | Karumbaravas | -do- | -do- |

| No. | Name of the Tribe | Means of livelihood | Economic Condition |
|---|---|---|---|
| 72. | Kaladies | Cooly work and cultivation | -do- |
| 73. | Pilliarnatham mixed gang | Cooly work | -do- |
| 74. | Appanad Kondayankottai Maravars | Cultivation, Cooly work | Some are fairly well-to-do but most are poor |
| 75. | Selliampatti Karutaswami gang | Cooly work | Poor |
| 76. | Maravars | Rely on 'Kaval' or crime for their maintenance | --- |
| 77. | Vellayankuppam Padayachis | Cultivation and cooly work | Poor |
| 78. | Gandharvakottai Koravars | Scavenging, basket making, coolly and cultivation. | Fair |
| 79. | Kuttappal Kallars | Cultivation and cooly work | Rather poor |
| 80. | Criminal Padayachis | Owners of land | Good |
| 81. | Jambuvanodai mixed gang | Cultivation | Some are poor |
| 82. | Vettaikarans | Cooly work | Poor |
| 83. | Gandarvakottai Kallars | Cultivation | --- |
| 84. | Uraligoundans | Cultivation and Cooly work | Fair |

| No. | Name of the Tribe | Means of livelihood | Economic Condition |
|---|---|---|---|
| 85. | Varaganeri Koravars | Basket and rope making and cooly work | Poor |
| 86. | (Moothakampatti) Ambalagars | Cattle lifting, basket making, they own lands | Fair |
| 87. | Vettuva Goundans | Some possess lands | -do- |
| 88. | Telugapatti Chettis | Cultivation, trade in coffee seeds & oils etc., | Fairly well-to-do |
| 89. | Periya Suriyur Kallars | Cooly work in lime-kilns and fields & cattle-lifting | Poor |
| 90. | Kal Inji Dabbai Koravars | Basket making, selling, grinding stones, cooly work, coir-making, stone cutting, selling of salt and pig rearing | -do- |




* G.O. No.4949, Home, dated 12.10.1938.

